உ

சிவமயம்

அருள்மிகு பகற்சால மூர்த்தி அய்யனார் துணை

# இலங்குடி

# அருள்மிகு பகற்சால மூர்த்தி அய்யனார் திருக்கோயில்



# திருக்குட நன்னீராட்டு விழா

## சிறப்பு மலர்

உ
சிவமயம்
அருள்மிகு பகற்சால மூர்த்தி அய்யனார் துணை

# இலங்குடி

# அருள்மிகு பகற்சால மூர்த்தி அய்யனார் திருக்கோயில்



## திருக்குட நன்னீராட்டு விழா

## சிறப்பு மலர்

வெகுதானிய ஆண்டு ஆனித் திங்கள் 22ஆம் நாள்

**6-7-1998**

# சேமங் குதிரை

சீர்மிகும் கீர்த்தி கொண்ட சிறப்புள்ள சேமங் குதிரை



இருகரமும் கூப்பிநின்று ஐயனாரப்பா – உன்றன்
இணையடியில் மனம்பதித்தோம் ஐயனாரப்பா!
கருணைகொண்டு காத்தருள்வாய் ஐயனாரப்பா – வழி காட்டிஒளி
கூட்டுவிப்பாய் ஐயனாரப்பா!

வாழையடி வாழையென ஐயனாரப்பா – உனை
வணங்கிவரம் பெற்றவர்யாம் ஐயனாரப்பா!
நாளைவரும் சந்ததிக்கும் ஐயனாரப்பா – நீ
நல்லவரம் தந்தருள்வாய் ஐயனாரப்பா!




## பாடுவார் முத்தப்ப செட்டியார் அவர்கள் தம் மரபினரான நகரத்ததார் முன்னேறும் பொருட்டுப் பாடியருளிய பஞ்சாட்சர வர்க்க பூஷணம்

நன்றே பெருக நவிலுங்கு பேரர் நகர்வணிகர்
என்றே உலகம் புகழ அவர்க்கீண்(டு)இருநிதியம்
நின்றே நிலவ அறமும் கனமும் நெடிதுபெறத்
தொன்றேசோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே

மன்னும் பெருமை பெருகிக் குபேரர் நகர்வணிகர்
என்னும் மகிமை உறவும் வறியவர்க்(கு) ஈந்திடவும்
பொன்னும் பொருளும் புவியில் முப்போகம் பொருந்திடவும்
துன்னுஞ்சோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே

சிவனா லயமும் திருமால் பணியும் சிறப்புறத்தான்
நவமாப் புதுக்கியும் ஆக்கியும் மேலோர் நவிலுநல்ல
தவமா மிதெனத் தரணியி லோங்கவும் தாங்குமகத்
துவமாசோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே

வந்தார்க் குதவும் வணிகர் குபேரனாம் வள்ளலுக்கும்
பிந்தார் தனத்தில் இவரே உலகில் பெரியரெனச்
சிந்தார் புறமிளை யாத்தங் குடியார் சிறப்புறவும்
கொந்தார்சோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே

யவனம் கலிங்கம் தமிழ்சிங் களம்பல யாண்டுமுள்ள
புவன மெலாமிவர் வர்த்தக மோங்கவும் புண்ணியஞ்சேர்
தவமும் தருமமும் தங்க வணிகர் தவம் பெறவும்
துவசோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே.

உ

சிவமயம்

ஸ்ரீ பகற்சாலமூர்த்தி ஐயனார் துணை

# ஸ்ரீ பூரணை புட்கலாம்பா சமேத ஸ்ரீ பகற்சாலமூர்த்தி ஐயனார் கோயில் ஜீர்ணோத்தாரண அஷ்ட பந்தன மஹா கும்பாபிஷேக பத்திரிகை

## பகற்சாலமூர்த்தி பதிகம்

சீருற்ற சென்னியிசை மின்னுமணி மகுடமும் சேர்ந்த வெண்ணீற்றினழகும்
சிந்துரத் திலகமொடு செங்கதிர்க் குழைகளும் செம்பவா உருஅதரமும்
காருற்ற இருளைத்துரக்கும் மமிமுகமொடும் கருணைமழை பொழிவிழிகளும்
கனக கேயூரமும் கல்லனைய வாகுவும் கண்டிகை தரித்த மார்பும்
தாருற்ற கரமதில் சங்கு ஆழிகளும் இடைதன்னில் ப்ரகாசகலையும்
சந்தமிகு கிண்கிணி சதங்கைகள் ஒலிக்கவும் சவ்வாது மெய்யிற் கமழவும்
பாருற்ற பூரணை புட்கலையுடன் வந்துபட்சம் வைத்துஎனை ஆளுவாய்
பணிபவர்க்கு அருள்புரி இலங்குடியி லேவளர் பகற்சால மாமூர்த்தியே

## பூமகள் நலந்திகழ் பூவுலகின் கண்

சகலலோக நாயகராகிய சிவபெருமான், முன்னொரு காலத்திலே, மோகினி அவதாரம் கொண்ட திருமாலை விரும்பிக்கூட, அவ்விருவருக்கும் திரு அவதாரம் செய்தருளி எல்லா உலகங்களையும், இராப்பகல் காக்கும் தலைமை பெற்று விளங்குகின்ற அரிகரபுத்திரராகிய ஐயனார் எழுந்தருளி இருக்கும் தெய்வத்தலங்கள் பல உள்ளன.

அவற்றுள் "பாண்டி நாடே பழம்பதியாக" என்று மணிவாசகரால் பாராட்டப்பெற்ற பெருமை வாய்ந்த பாண்டிநாட்டின் கண்ணே, கிழக்கே வீரவனமும், தெற்கே காளையார்கோயிலும், மேற்கே திருப்புத்தூரும், வடக்கே குன்றக்குடியும் பக்கத்தலங்களாய் விளங்க நடுநாயகமாய் வீற்றிருப்பது நலங்களெலாம் நிறை இலங்குடியாகும்.

இப்பெருமை வாய்ந்த இலங்குடியில் புராதன ஐயனார் ஆலயம் ஒன்று

உள்ளது. இவ் ஐயனார் திருநாமம் பகற்சாலமூர்த்தி என்பதாகும். திருமாலக்கும், சிவனக்கும் பாலமரத்தின் அடியில் அவதரித்தமையின் பகற்சாலமூர்த்தி எனப் பெயர் வழங்குகின்றது. இவ்வையனார் ஆலயம் இப்போது பழுதுகள் பார்த்துப்புதுப்பிக்கப் பெற்றிருக்கிறது.

ஸ்ரீ பூரண புட்கலாம்பா சமேத ஸ்ரீ பகற்சாலமூர்த்தி ஐயனாருக்கும், பரிவார தேவதைகளுக்கும் நிகழும் வெகுதான்ய வருடம் ஆணி மாதம் 22ம் தேதி (6.7.1998) திங்கட்கிழமை சுக்கிலபட்சம் துவாதசி திதியும் அனுஷ நட்சத்திரமும், சித்த யோகமும் கூடிய சுபதினத்தில் காலை மணி 9.00 க்கு மேல் 10.00 க்குள் சிம்ம லக்னத்தில் அஷ்ட பந்தன மஹா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது. மெய்யன்பர்கள் அனைவரும் வந்து தரிசித்துப் பேரானந்தப் பெருவாழ்வு வாழவேண்டுமாய்ப் பிரார்த்திக்கின்றோம்.

நிகழ்ச்சி நிரல்

| ஆங்கில தேதி | தமிழ் தேதி | கிழமை | நேரம் | நிகழ்ச்சி |
|---|---|---|---|---|
| 1.7.98 | ஆனி 17 | புதன் | காலை 6.00 மணி | அனுக்ஞை, விநாயகர் பூஜை தன பூஜை, கணபதி ஹோமம் |
| 2.7.98 | ஆனி 18 | வியாழன் | காலை 9.00 மணி | நலக்கிரஹ ஹோமம் |
| 3.7.98 | ஆனி 19 | வெள்ளி | மாலை 3.00 மணி | வாஸ்து சாந்தி |
| 4.7.98 | ஆனி 20 | சனி | காலை 11.00 மணி | மிருத்சங்கிரஹணம், அங்குரார்ப்பணம் |
| | | | மாலை 5.00 மணி | கலாகர்ஷணம், கடஸ்தாபனம் |
| | | | இரவு 8.00 மணி | முதற்கால யாக பூஜை, பூர்ணாகுதி |
| 5.7.98 | ஆனி 21 | ஞாயிறு | பகல் 11.00 மணி | இரண்டாம் கால யாக பூஜை, பூர்ணாகுதி |
| | | | இரவு 8.00 மணி | மூன்றாம் கால யாக பூஜை, பூர்ணாகுதி |
| 6.7.98 | ஆனி 22 | திங்கள் | காலை 7.00 மணி | நான்காம் கால யாக பூஜை பூர்ணாகுதி |
| | | | காலை 9–10 மணி | மகா கும்பாபிஷேகம் |
| | | | பகல் 12.00 மணி | மகாபிஷேகம் |
| | | | இரவு 8.00 மணி | சுவாமி திருவீதி உலா |

வேதபாராயணம் திருமுறைப் பாராயணம் நடைபெறும்

வெகுதான்ய வருஷம்
ஆனி மாதம் 5-ஆம் தேதி
சர்வசாதகம் P.S. அடைக்கலச் சிவாச்சாரியர்
கண்ணங்காரக்குடி

இங்ஙனம்
நகரத்தார்,
நாலுகரை வேளார்கள்

| Private Secretary | Ref. No. D7/2547 |
|---|---|
| To His Holiness Sri Jagadguru | |
| Shankaracharya, Dakshinamnaya | Camp : Sringeri |
| SRI SARADA PEETHAM | |
| SRINGERI - 577 139 (Karnataka) | Date : 4.7.98 |

Kavingnar
Na. Meenavan M.A. M.Ed. M.Phil
24-B, Ramaswami Chettiar St
Pananthope
Karaikudi - 630 001

நீங்கள் அனுப்பின அருள்மிகு பூரணை புட்கலை உடனாய பகச்சால மூர்த்தி அய்யனார் ஆலய திருக்குட நீராட்டு விழா பத்திரிகை கிடைத்து ஸ்ரீ ஸ்ரீ மகாஸந்நிதானம் அவர்களின் பாத கமலங்களில் உங்கள் நமஸ்காரங்களுடன் ஸமர்ப்பிக்கப் பட்டது. மேற்படி ஆலய திருக்குட நீராட்டு விழா நிர்விக்ன மாகவும், சிறப்பாகவும் நடந்து அதில் பங்கு கொள்ளும் ஆஸ்திக மஹாஜனங்கள் எல்லோரும் க்ஷேமமாகவும், ச்ரேயஸ்ஸீடனும் வாழ அனுக்ரஹித்தளித்த மந்திராக்ஷதை யும் ஸ்ரீ சாரதா சந்த்ரமௌளீஸ்வரர் பிரஸாதமும் இத்துடன் அனுப்பியிருக்கிறோம்.

உ

சிவ சிவ

**திருவருள்திரு**
**தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
(ஆதீனகர்த்தர்)

திருவண்ணாமலை ஆதிகம்
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்
தமிழ்நாடு
Ph: குன்றக்குடி - 04577-64267
காரைக்குடி - 04565-23215

1.7.98

வாழ்த்துரை

அருள்மிகு ஐயனார், அரிகர புத்திரராக உதித்தவர் என்பது புரா ண வரலாறு. இவர் கிராமந்தோறும் காவல் தெய்வமாகக் கோயில் கொண்டு அருள்பாலித்து வருகிறார். அவ்வகையில் இலங்குடி கிராமத்தில் அருள்மிகு பகச்சாலமூர்த்தி ஐயனார் என்ற திருநாமத்துடன் அருள்மிகு பூரணைபுட்கலை உடனாய மர்ந்து கோயில் கொண்டு அருள்புரிந்து வருகிறார்.

இப்பெருமானின் திருக்கோயிலைப் புதுப்பித்து 6.7.98 அன்று திருக்குட நீராட்டு நடைபெறுவதும் அவ்விழாவை யொட்டி மலர் வெளியிடவிருப்பதும் அறிந்து மிக்க மகிழ்ச்சி

இத்திருக்கோயில் திருப்பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்ட நகரத்தார் பெருமக்களுக்கும் அன்பர்களுக்கும் அருள்தரு பகச்சாலமூர்த்தி ஐயனாரின் திருவருள் நிறைவதாகுக.

திருக்குட நீராட்டு விழா மலர் சிறப்புடன் வெளிவரத் திரு வருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு

பெறுநர்
காப்பியக் கவிஞர்
திரு நா. மீனவன் அவர்கள்
24பி இராமசாமி செட்டியார் வீதி
பனத்தோப்பு
காரைக்குடி 630 001

உ

சிவபெருமான் பேரருள்

# புனித மிக்க
# ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்

**292 ஆவது குருமகாசன்னிதானம் & ஆதீனகர்த்தர் மதுரை ஆதீனம்**
**70, தெற்காவணி மூல வீதி மதுரை 625 001**

Date : 1.7.'98

பெறுநர்
காப்பிய கவிஞர்
நா. மீனவன், M.A; M.Ed; M.Phil
24-B, இராமசாமி செட்டியார் வீதி,
பனந்தோப்பு,
காரைக்குடி 630 001

அன்புடையீர்

ஆசிர்வாதம்,

இலங்குடி அருள்மிகு பூரணை புட்கலாம்பா சமேத ஸ்ரீபகற் சால மூர்த்தி அய்யனார் ஆலயத்துக்கு திருப்பணிகள் செய்யப் பட்டு, பெருஞ்சாந்திப் பெருவிழாவும் நடைபெற இருப் பதை அறிந்து மிக மகிழ்ச்சி அடைகிறோம். இத்திருப் பணியில் அயராது பாடுபட்டு உழைத்த திருப்பணிக் குழுவினரைப் பாராட்டுகிறோம்.

பெருஞ்சாந்திப் பெருவிழாவும், அதைத் தொடர்ந்து நடை பெற இருக்கின்ற மலர் வெளியீட்டு விழாவும் இனிது நடந்தேற எல்லாம் வல்ல எம்பெருமான் திருவடிகளைச் சிந்திக்கிறோம்.

எல்லோருக்கும் ஆசீர்வாதம்!
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்

உ

சிவசிவ

கயிலை மாமுனிவர்
திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், காசித்திருமடம்

திருப்பனந்தாள் - 612 504
(தஞ்சை மாவட்டம்)
ph: 56655

Date :4.7.98

## வாழ்த்துரை

காரைக்குடிக்கு அருகிலுள்ள அருள்மிகு இலங்குடி ஸ்ரீபகச் சால மூர்த்தி அய்யனார் கோவில் குடமுழுக்கு விழா 6.7.98 அன்று நிகழவிருப்பதும், விழாச் சார்பாக மலரொன்று வெளியிடவிருப்பதும் அறிய மகிழ்ச்சி.

எல்லாவற்றிற்கும் முன்னவனாய் முன்னிற்கும் முழுமுதலின் அருள்துணையால் குடமுழுக்கு விழாச் சிறப்புற நிகழவும், விழாமலர் தமிழும் சமயமும் கலந்த இனிய மணம் கமழும் மலராய் மலரவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்.

உ

சிவமயம்

# கோவிலூர் மடம்

## கோவிலூர் - 623 319

## (காரைக்குடி அருகில்)

தொலைபேசி 22646

---

தேதி : 13.7.98

**ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் கோவிலூர் ஆதீனகர்த்தர்**

இலங்குடி அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனார் கோவில் கும்பாபிஷேகம் நடைபெற்று மலர் வெளியிடுவது அறிந்து மகிழ்ச்சியடைகிறோம்.

கோவில் பராமரிப்புடன் மக்களிடத்திலே நல்ல பக்தி வளர வேண்டும், வளர்க்க வேண்டும் என்பது எமது ஆசையாகும்.

கடவுளிடம் பக்தி கொண்டு சிறப்பான வாழ்க்கை நடத்துவதே மக்கள் பிறப்பின் நோக்கமாகும். பக்தி என்பது தூய அன்பையே குறிக்கும். உள்ளுணர்வுடன், பரிசுத்தமான நிலையில் விளங்கும் பக்தியை யாவரும் மேற்கொள்ள வேண்டும். இத்தகைய பக்தியால் நாம் கடவுளின் திருவருளை அடைகிறோம். அத்திருவருளின் துணையால் துன்பம் நீங்கி இன்பம் பெறவும்; வாழ்வின் தடைகளைக் கலைந்து முன்னேறவும்; மன அமைதிபெறவும் இயலும் என்பதை வெளிப்படையாக உணரலாம்.

நம் நாயன்மார்களும், ஆழ்வார்களும் பெற்ற பேறுகளை நாம் அறிவோம். அவர்களுடைய நெறிமுறைகள் நமக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளன. பக்திநெறியை வளர்க்க உதவும் சாதனங்களாகத் திருமுறைகளும், திவ்யப் பிரபந்தமும் உதவுகின்றன

பக்தி வளரும் பொழுது ஒழுக்கம் நிலை நிற்கும்; எல்லா மக்களையும் சகோதரர்களாக நோக்கும் எண்ணம் ஏற்படும்; பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாத மன உறுதி உண்டாகும். ஏன், எல்லா நலன்களும் பெருகி வாழ்வு சிறக்கும். அவ்வாறு பக்தியை மேற்கொண்டு வளரும் சந்ததியினருக்குப் பக்தியை வளர்ப்போம்.

அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனார் கோவில் கும்பாபிஷேகம் நடைபெறுவதற்கும், மலர் வெளியிடுவதற்கும் துணை நின்று உழைக்கும் அன்பர்களுக்கும், பக்தர்களுக்கும் வளமும், நலமும் பெருக எல்லாம் வல்ல திருநெல்லை உடனாய கொற்றவாளீஸ்வரர் திருவடிகளை வழுத்துகிறோம்.

ஸ்ரீ சற்குரு நாதன் துணை

## அருள் மிகு பகற்சால மூர்த்தி அய்யனார் துணை

## தலைவர் உரை

சைவமும் தமிழும் இரு கண்களென எண்ணுபவர் நகரத்தார். தேடிய பொருளெல்லாம் திருப்பணிக்குச் செலவிட்டு மகிழ்ந்த திருவுடையர். சிவன் என்னும் செம்பொருளை முதலாக வணங்கும் சிறப்புடைய நகரத்தார்க்குக் குல தெய்வ வழிபாடும் உண்டு. குலதெய்வ வழிபாடு செய்த பின்னரே எந்த நல்ல செயலையும் தொடங்கும் மரபு இன்றளவும் நம் நகரத்தார் சமூகத்தினரிடம் இருந்து வருகிறது.

ஒன்பது நகரக் கோவில்களையுடைய நகரத்தார்க்குக் குலதெய்வங்களும் பல உள. அந்த வகையில் இலங்குடிக் கிராமத்தில் குடிகொண்டு விளங்கும் அருள்மிகு பகற்சால மூர்த்தி அய்யனாரைத் தம் குலதெய்வமாகக் கொண்டு வணங்கும் நகரத்தார் பெருமக்கள் எறக்குறைய 24 ஊர்களில் உள்ளனர். சற்றேறக் குறைய 3000 புள்ளிகள் அருள்மிகு பகச்சால மூர்த்தி அய்யனாரை வழிபட்டுச் சீரோடும் சிறப்போடும் விளங்குகின்றன.

காட்டில் வேட்டையாடிக் களைத்த வேடுவன் ஒருவன் தன் மெய் வருத்தம் தணிய அங்கிருந்த பாலை மர நிழலில் தங்கி இருந்த போது அம்மரத்தின் மேல் ஒரு கவலைக் கொடி தழைத்துப் படர்ந்திருப்பதைக் கண்ணுற்றான். பின் அக்கொடியின் கீழ் பூமியில் இருந்த அதன் கிழங்கை உண்ணக் கருதி தன் கடப்பாரை கொண்டு பூமியைத் தோண்டினான். அப்பொழுது பாரை எதன் மீதோ மோதிய ஒலி கேட்டது. உடனே அங்கு தோண்டிப் பார்க்கையில் அருள்தரும் பகச்சால மூர்த்தி அய்யன் வடிவம் வெளிப்பட்டது. பிறகு அங்கிருந்த ஒரு முதியவர் கனவில் அய்யனார் தோன்றி நமக்கு ஒரு கற்கோயில் சமைப்பாய் எனப் பணித்தார். அதன்படி தன வணிகராகிய நகரத்தாரின் பொருள் உதவியுடன் கோயில் எழுப்பப்பட்டது

அவ்வாறு கட்டப்பட்ட இவ்வாலயத் திருக்குட நீராட்டுவிழா பிரமோதூத ஆண்டு வைகாசித் திங்கள் 26 ஆம் நாள் (8-6-1930) இல் அஷ்டபந்தன மருந்து சார்த்தி நடைபெற்றுள்ளது. இதற்கு முன் ஒரு திருக்குட நீராட்டு விழா, தேவ கோட்டை அரு.லெ. குடும்பத்தினரால் நடத்தப் பெற்றுள்ளது. அதற்கான தேதி முதலிய விவரங்கள் தெரியவில்லை.

பிற்காலத்தில் நகரத்தார்க்கும், நாலு

கரை வேளாளர்களுக்கும் கோயில் காரணமாக மன வேறுபாடு உண்டானமையால் கோயிலை மராமத்துச் செய்யும் பணியில் நாட்டம் இன்றி விட்டு விட்டனர். நாளடைவில் கோயில் மிகவும் பழுதடைந்த நிலையில் வேளார்கள் மீண்டும் நகரத்தாரை அணுகித் திருப்பணி செய்து உதவ வேண்டினர். அதனை ஏற்ற நகரத்தார் காரைக்குடி மேல மடத்தில் கூடி அய்யனாரைக் குல தெய்வமாய்க் கொண்ட அனைத்தூர்ப் புள்ளிகளுக்கும் செய்தியனுப்பித் திருப்பணிக் குழு ஒன்றினை 1982 இல் காரைக்குடி திரு M.N.ST சிதம்பரம் செட்டியார் அவர்களைத் தலைவராகவும், திருவாளர்கள் L. சண்முகம் செட்டியார், நா.சி.சொ. சொக்கலிங்கம் செட்டியார் ஆகியோரைத் துணைத் தலைவர்களாகவும், மு.மெ. முத்துராமன் செட்டியார், நா. மெய்யப்ப செட்டியார் ஆகியோரைச் செயலாளர்களாகவும்கொண்டு அமைத்தனர். அக்குழுவினரின் அயரா முயற்சியால், துந்துபி ஆண்டு ஆனித் திங்கள் 17 ஆம் நாள் (1.7.1982) அன்று சீரோடும் சிறப்போடும் திருக்குட நீராட்டு விழா இனிது நிகழ்ந்தது. அதனை ஒட்டி மலர் ஒன்றும் வெளியிடப்பட்டது.

அதன்பின் 16 ஆண்டுகளுக்குப் பின் மறுபடி திருப்பணி செய்ய முடிவு செய்யப்பெற்று அதற்கென ஒரு குழுவையும் அமைந்தனர். அடியேன் தலைவராக வீற்றிருக்க, ஒ. சிறுவயல் L. சபா ரெத்தினம் செட்டியார் காரைக்குடி A.V.M பழனியப் செட்டியார் தேவகோட்டை, S.M.L வெள்ளையன் செட்டியார், காரைக்குடி நா. மெய்யப்பன் ஆகியோர் துணைத் தலைவர்களாகவும் காரைக்குடி, ஆவி.ப.முரு.மு.முரு.பழ.சிதம்பரம் தேவகோட்டை, கி.கரு.ராம.கரு. பழனியப்ப செட்டியார், காரைக்குடி M.N.S.T. நாகப்பன் ஆகியோர் செயலர்களாகவும், காரைக்குடி SN. நாராயணன் அவர்கள் பொருளாளராகவும் அமைத்து ஒரு குழுவை ஏற்படுத்தினர்.

அதன்படி திருப்பணிக் குழுவினரின் இடைவிடா முயற்சியாலும் அய்யனாரின் அருளாலும் கிடைத்த பொருளதவி கொண்டு நல்ல முறையில் திருப்பணிகள் நடைபெறத் தொடங்கின.

அருள்மிகு பகற்சால மூர்த்தி அய்யனாரின் கருவறைக் கோபுரச் சிற்பங்கள் யாவும் பழுதுபட்டிருந்தன. அவற்றை நீக்கி, அனைத்துச் சிற்பங்களையும் புதிதாக அழகுற அமைத்துப் பஞ்ச வண்ணம் வைத்துப் புதுப்பிக்கப் பெற்றுள்ளது.

இராச கோபுரம் உட்பட, மற்றுமுள்ள பரிவார தேவதைகளின் கோபுரங்கள், விமானங்கள் ஆகிய

அனைத்தும் பழுதுபார்த்துப் பஞ்ச வண்ணம் தீட்டப் பெற்றுள்ளது. சேமங் குதிரையும் வண்ண வேலைப் பாடுகளுடன் புதுப்பிக்கப் பெற்றுள் ளது. ஊருணிக்கரைப் பிள்ளையார் கோவில் கோபுரமும் பழுது பார்த் துப் பஞ்ச வண்ணம் தீட்டப்பெற் றுள்ளது.

அய்யனார் கோவில் கர்ப்பப் கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியவற்றின் தரைகளில் சலவைக் கற்கள் (மார்பில்) பதிக்கப்பட்டுள் ளன. மேலும் கருவறைச் சுவருக்குக் கண்ணாடிக் கற்கள் (கிளாஸ் டைல்ஸ்) ஒட்டப் பெற்றுள்ளன. பிற சந்நிதிச் சுவர்களில் கண்ணாடிக் கற்களும் தரைகளில் ஆத்தங்குடிக் கற்களும் பதிக்கப்பட்டுள்ளன. கம்பிக் கதவுகள் அணைத்துச் சந்நிதிகளிலும் போடப்பட்டுள்ளன.

கருப்பர் மண்டபத்துத் தள வரிசை யில் ஆத்தங்குடிப் பூக் கற்கள் பதிக் கப் பெற்றுள்ளன. மேடைக் காளி, மேடைக் கருப்பர் உள்ள மேடையில் சலவைக்கல் பதிக்கப் பெற்றுள்ளது. சுற்றிலும் இரும்பு வேலி அமைக் கப்பட்டுள்ளது. மேடைக் கருப் பருக்கு முன்பாகச் சிமிண்டுத் தகடு வேய்ந்த கொட்டகை ஒன்றும், கருப் பர் மண்டபத்தையும் அய்யனார் மண்டபத்தையும் இணைந்து, வெய் யில் தடுப்பாக சிமிண்டுத் தகடு வேய்ந்த கொட்டகை ஒன்றும் அமைக்கப் பெற்றுள்ளது.

கோயிலில் உள்ள பழுதுபட்ட மின் வயர்கள் அனைத்தையும் நீக்கிப் புதிய வயரிங் செய்யப்பட்டிருப்ப தோடு மின் விசிறி வசதிகளும் செய் யப் பெற்றுள்ளன. மூன்றடுக்கு (திரீபேஸ்) மின்சார இணைப்பும் வாங்கப் பெற்றுள்ளது.

மேல்நிலை நீர்த் தொட்டி ஒன்று அமைத்து, பல குழாய்கள் அமைத்து, மின் மோட்டார் மூலம் தண்ணீர் பெற வசதி செய்யப் பட்டுள்ளது.

மேடைக் காளிக்குப் பின் உள்ள சிறிய நாட்டு ஓடால் ஆன கொட் டகை பிரிக்கப்பட்டுப் புதிதாகக் கான்கிரீட் மடைப் பள்ளி ஒன்று விஷேச காலங்களில் பயன்படுத்து வதற்கென அமைக்கப் பெற்றுள் ளது.

பெரிய அளவில் யாகாலை அமைக் கப்பட்டுடிருந்தது. அய்யனாருக்குக் கமல வேதிகை அமைத்துப் பஞ்ச குண்டங்களும் அமைக்கப் பெற் றன. மற்ற பரிவார தேவதைகளுக்கு அஞ்சு வேதிகை அமைத்து, அஞ்சு குண்டமும் அமைத்து யாக பூஜை 4 கால பூஜையாக நடந்தேறியது.

கண்ணங்காரக்குடி PS. அடைக்கல

சிவாசாரியார் சர்வசாதகமாக இருக்க, வேளாளர் சமூகத்தைச் சார்ந்த உள்ளூர், வெளியூர்ச் சிவாச் சாரியார்களைக் கொண்டு பூஜைகள் நடத்தப்பட்டன. அவர்களுக்கெனத் தனியே வேளார் சமூகத்தினர் உண வேற்பாடு செய்திருந்தனர். திருப் பணிக் குழுவிலிருந்தும் உணவுக் கென ஒரு தொகை வழங்கப்பட்டது.

வெகுதான்ய ஆண்டு ஆனித் திங்கள் 22 ஆம் நாளில் காலை 9 மணியி லிருந்து 10 மணிக்குள்ளாகத் திருக் குட நீராட்டுப் பெருவிழா இனிது நடந்தேறியது. இரவு வெள்ளி யானை வாகனத்தில் சுவாமி புறப் பாடு சிறப்புற நடந்தது.

திருக்குட நீராட்டு விழா வன்று திருவாளர் வேலாயுதஞ் செட்டியார் தலைமையில் விராமதி நகரத்தாரின் மேற்பார்வையில் நகர விருந்தும் நல்ல முறையில் நடந்தேறியது.

கோயிலூர் ஆதீன கர்த்தர் தவத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் திருக்குட நீராட்டு விழாவில் கலந்து கொண்டு அனைவர்க்கும் அருள் பாலித்தார்கள். அவர்களுக்கு வணக் கங்களைத் திருப்பணிக் குழுவினர் சார்பாகத் தெரிவித்துக் கொள்கி றேன்.

திருக்குட நீராட்டு விழாவன்று மிகச் சிறப்பாக குடிநீர் வசதி செய்து கொடுத்த நகராட்சியினரையும், சிறப் பாகப் பேருந்து வசதி செய்து கொடுத்த தமிழ்நாடு அரசுப் போக்கு வரத்துக் கழகத்தினரையும் இவ்வசதி கள் சிறப்பாகக் கிடைக்க உதவிய காரைக்குடி திரு. முத்துப் பழனிப் பன்,S.L.N.பெரியணன், C.T.RM.N. பெரிய கருப்பன் ஆகியோரையும் பாராட்டி நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

தண்ணீர்ப்பந்தல் வைத்துச் சிறப் பாக நடத்தித் தந்த கோனிகா லாப் உரிமையாளர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கின்றேன்.

மேலும் இத்திருக்குட நீராட்டு விழா சிறப்புற நடைபெறுவதற்கு உதவிய இலங்குடி ஊராட்சி மன்றத் தலைவருக்கும், உறுப்பினர்களுக் கும், ஊர்ப் பொதுமக்களுக்கும், நாலுகரை வேளார்களுக்கும் பின் பலமாய் நின்றுதவிய அனைத்து நகரத்தார் பெருமக்களுக்கும், அல் லும் பகலும் மெய் வருத்தம் பாராது கண்துஞ்சாது உழைத்த திருப்பணிக் குழுவினர்களுக்கும் என் நன்றி உரியது.

வெகுதான்ய ஆண்டு ஆவணித் திங்கள் 4 ஆம் நாள் (20.8.1998) அன்று 1008 சங்காபிஷேகத்துடன் மண்ட லாபிஷேக நிறைவு விழா நடை பெறவுள்ளது. அன்று தினம் மலர் ஒன்று வெளியிடப்படுகிறது. அதற்

கென அமைக்கப்பட்ட மலர்க்குழு வினர் மிகச் சிறப்பாக இப்பணியில் ஈடுபட்டு மலரை வெளிக் கொண்டு வந்துள்ளனர். இதன் பதிப்பாசிரிய ராக இருந்து சிறப்பாக இம்மலரைத் தொகுத்த காப்பியக் கவிஞர் நா. மீனவன் (கண்டரமாணிக்கம்) அவர் களுக்கும், விளம்பரங்கள் வாங்கித் தந்த பெருமக்கட்கும், விளம்பரங் கள் தந்த நிறுவனத்தார்க்கும் கட்டு ரை, கவிதை எழுதித்தந்த பெருமக் கட்கும் இம்மலரை அழகிய முறை யில் அச்சிட்டுத் தந்த சென்னை மல்டிவிஸ்டா குளோபல் ஆப்செட் அச்சகத்தார் திருமிகு. ஆர். ஜெய ராமன், ஆர். ரவி ஆகியோர்க்கும் என் நன்றி என்றும் உரியது.

அனைவருக்கும் அருள்மிகு பகற் சால மூர்த்தி அய்யனார் அனைத்து நலங்களையும் வாழ்நாளையும் தருவாராக.

அன்பன்
மு.மெ. முத்துராமன்
தலைவர்

# அருள்மிகு இலங்குடி ஸ்ரீ பகச்சால மூர்த்தி ஐயனார்கோவில்

## திருப்பணிக்குழு



மெ.செ.ச.மு.மெ.
முத்துராமன் செட்டியார்
காரைக்குடி
தலைவர்



L. சபா ரெத்தினம் செட்டியார்
ஒ.சிறுவயல், துணை தலைவர்



S.M.L. வெள்ளையன் செட்டியார்
தேவ கோட்டை துணை தலைவர்



AVM. பழநியப்ப செட்டியார்
காரைக்குடி, துணை தலைவர்



நா. மெய்யப்பன்
காரைக்குடி துணை தலைவர்



ஆவி.ப.முரு.மு.முரு.பழ.சிதம்பரம்
காரைக்குடி
செயலாளர்



M.N. S.T. நாகப்பன்
காரைக்குடி, இணைச் செயலாளர்



கி.கரு.ராம.கரு. பழநியப்ப செட்டியார்
தேவகோட்டை, இணைச் செயலாளர்



S.N. நாராயணன்
காரைக்குடி, பொருளாளர்

## அருள்மிகு இலங்குடி ஸ்ரீ பகச்சால மூர்த்தி ஐயனார்கோவில்

### மலர்க்குழு



**L.சுபாரெத்தினம்**
தலைவர்



MS.R.M. மெய்யப்பன்
துணைத் தலைவர்



**S.M.L. வெள்ளையன்**
துணைத் தலைவர்



PL. சிதம்பரம்
செயலாளர்



N. மெய்யப்பன்
இணைச் செயலாளர்



N. மீனவன்
இணைச் செயலாளர்



முத்து. பழநியப்பன்
இணைச் செயலாளர்



S.N. நாராயணன்
பொருளாளர்

# அருள்மிகு இலங்குடி பகற்சால மூர்த்தி அய்யனார் கோயில் திருப்பணிக்குழு

| | |
|---|---|
| தலைவர் | மெ.செ.ச.மு.மெ. முத்துராமன் செட்டியார் காரைக்குடி |
| துணைத்தலைவர் | ஆவி. மெ. பழநியப்ப செட்டியார், காரைக்குடி |
| | லெ. சபாரத்தினம் செட்டியார், ஓ.சிறுவயல் |
| | சோம. லெ.வெள்ளையன் செட்டியார், தேவகோட்டை |
| | நா. மெய்யப்பன், காரைக்குடி |
| செயலர் | பழ. சிதம்பரம், காரைக்குடி |
| இணைச்செயலர்கள் | கி.கரு. பழ.பழநியப்ப செட்டியார், தேவகோட்டை |
| | மெ.நா.சித. நாகப்பன், காரைக்குடி |
| பொருளார் | சா.நா.நாராயணன் செட்டியார் காரைக்குடி |

**நிர்வாகக் குழு உறுப்பினர்கள்**

காரைக்குடி

சா.லெ.நா.சா நாராயணன்
M.S.RM. மெய்யப்பன்
சொ. அழகப்ப செட்டியார்
ஆவி. பழ. சித. ராம. ராமநாதன்
இராம. நாராயணன்
சுப. பழனியப்பன்
முரு.லெ. லெட்சுமணன்
ப.சு. ராம. அ. வள்ளியப்பன்
முரு. லெ. ராமநாதன்
ஆத.மெ. ராம. நாச்சியப்பன்
நா.வ. சேதுராமன்
அ.மு.க. கருப்பஞ் செட்டியார்
மெ.சிவ. தண்ணீர்மலை செட்டியார்
முத்துபழனியப்பன்

மெ.நா. மெ. மெய்யப்ப செட்டியார்

மெ.செ.மெ.சொ. மெய்யப்ப செட்டியார்

மெ. அரு. வெங்கிடாசலம் செட்டியார்

லேனா கணேசன்

பழ. முத்தையா

சு.ராம.மெ.மெய்யப்பன்

தேவகோட்டை

பழ. சாந்தப்பன்

பழ.செ.கரு.லெ. சந்திரமவுலீஸ்வரன் செட்டியார்

சேவு.ராம.அரு.ராம். சுப்பிரமணியன் செட்டியார்

கரு.கி.க.ராம. சொர்ணலிங்கம் செட்டியார்

பிச.பழ. பிச்சப்ப செட்டியார்

முத்து. க.அ.ராம.அ. ராமநாதன் செட்டியார்

AR. மோகன் செட்டியார்

அழ. பெரிய கருப்பர்ன் செட்டியார்

வே.மு.வ. வள்ளியப்ப செட்டியார்

RM.S. சொக்கலிங்கம் செட்டியார்

KR. முத்தையா செட்டியார்

மிதிலைப்பட்டி

ந.பழ.சித.மு.வ. ராமநாதன் செட்டியார்

கரு.யெ.லெ. அழகப்ப செட்டியார்

புதுப்பட்டி

நாக. ராமசாமி செட்டியார்

RM. சதாசிவம் செட்டியார்

வலையபட்டி

சொ. மாணிக்கம் செட்டியார்

அரண்மனை சிறுவயல்

SP. சபாபதி (BOM)

ஓ.சிறுவயல்

சொ.லெ.அழகப்ப செட்டியார்

நாச்சியாபுரம்

சுப.ராம சுப்பிரமணியன் செட்டியார்

சே.சு. வினைதீர்த்தான் செட்டியார்

கண்டவராயன்பட்டி

நா.சி.சொ. செந்தில்நாதன் செட்டியார்

AL.S. அழகப்ப செட்டியார்

கோனாபட்டு

M.M.R. நாராயணன்

மெ.நா.கு. நாகப்ப செட்டியார்

பெ.சித.வி.சம்பந்தம் செட்டியார்

சு.முரு. நாச்சியப்பன்

குழுபிறை

TM.RM. ராமநாதன் செட்டியார்

தெ.நா.தெ. தேனப்ப செட்டியார்

கூத்தலூர்

லெ. நாராயணன் செட்டியார்

அள. முருகப்ப செட்டியார்

விராமதி

SP. அழகப்ப செட்டியார்

கதி.சோம. வேலாயுதம் செட்டியார்

அமராவதிபுதூர்

கா. கும. வ. நாகப்ப செட்டியார்

கா.கும. அழ.காளியப்ப செட்டியார்

கா.ராம. சோம.ராம. கிருஷ்ணன் செட்டியார்

கதி.சே.சேது. கதிரேசன் செட்டியார்

## அருள்மிகு இலங்குடி

## ஸ்ரீ பகச்சால மூர்த்தி ஐயனார்கோவில்

### மலர்க்குழு

தலைவர்

**L.சுபாரெத்தினம்**

துணைத் தலைவர்

**MS.R.M. மெய்யப்பன்**

**S.M.L. வெள்ளையன்**

செயலாளர்

**PL. சிதம்பரம்**

இணைச் செயலாளர்

**N. மெய்யப்பன்**

**N. மீனவன்**

**முத்து. பழநியப்பன்**

பொருளாளர்

**S.N.நாராயணன்**

# பதிப்புரை

பாரிலே நம்மைக் காக்கும்
பகச்சால மூர்த்தி அய்யன்
சீர்பெறும் குடநீ ராட்டுச்
சிறப்பினை உயர்த்த வேண்டி
ஏர்பெறுமலரோன் றிங்கே
எழிலுடன் சமைக்க வேண்டி
ஓர்குழு அமைத்துச் செய்த
உயர்மலர் உங்கள் கையில்

கட்டுரை தந்தோர், நல்ல
கவிதைகள் தந்தோர், மேலும்
மட்டவிழ் மலர்கொள் அய்யன்
மகிமையை நாளும் பேசச்
செட்டிமார் உதவி செய்த
சிறப்பினை எடுத்துச் சொல்லிக்
கட்டுரை செய்தோர்க் கெல்லாம்
கவிஞன்யாண் நன்றி சொல்வேன்

அய்யனார் அருளைச் செய்தார்
அடியனேன் தொகுத்துத் தந்தேன்
மெய்தரும் ஆன்மீ கத்தை
மேன்மையாய்த் தாங்கி உங்கள்
கையினில் மலர்கள் தந்தோம்
கடமையை நிறைவு செய்தோம்
அய்யனின் பாதம் போற்றி
அருள்நலம் பெற்று வாழ்வீர்!

**காப்பியக் கவிஞர் – மீனவன்**

சிவமயம்

# அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனார் துணை

மிகவும் சிறப்புடையதும் நகரத்தார்களில் மிக அதிகமான புள்ளிகள் வணங்கும் குலதெய்வமாகவும் விளங்கும் அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனார் கோயில், திருப்பணி செய்யப்பெற்று, முதல் திருக்குட நீராட்டு விழா பிரமோதூத ஆண்டு வைகாசித் திங்கள் 26 ஆம் தேதி *(8.6.1930)* சுவாமிகளுக்கு அஷ்டபந்தன மருந்து சாத்தி மிகவும் சிறப்பாக நடைபெற்றிருக்கிறது. மேற்படி திருக்குட நீராட்டு விழாவையும் காரைக்குடி திரு. ஆவி.ப.முரு.மு. முருகப்பச் செட்டியார் அவர்கள் முன்னின்று நடத்தியிருக்கிறார்கள். பின்பு நான்குகரை வேளார்களுக்குள் பிரச்னை ஏற்பட்ட போது எங்கள் ஐயா திரு. முருகப்பச்செட்டியார் அவர்கள் தலையிட்டு அவர்களுக்குள் சமாதானம் செய்து வைத்துச் சிறிது காலம் கோயில் நிர்வாகத்தையும் தானே முன்னின்று நடத்தியிருக்கிறார்கள். இலங்குடியில் நகரத்தார் வசதிக்காக நகரவிடுதி ஒன்றும் அவர்கள் முயற்சியால் கட்டப்பட்டது. மேற்படி நகர விடுதியையும் எங்கள் அப்பத்தாள் தெய்வாணை ஆச்சி அவர்களின் நிர்வாகத்தில் பலமுறை பழுதுபார்க்கப்பட்டு நல்லமுறையில் பாதுகாக்கப்பட்டு இருக்கிறது.

துந்துபி ஆண்டு ஆனித்திங்கள் 17ஆம் தேதி *(1.7.82)* காரைக்குடி திரு மெ. நா. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமையில் திரு AVM. பழநியப்ப செட்டியார் அவர்களைச் செயலாளராகவும், திரு. மெ. செ.ச.மு.மெ. முத்துராமன் செட்டியார் அவர்களைப் பொருளாளராகவும் கொண்ட நிர்வாகக் குழுவினர் முயற்சியால் இரண்டாவது திருக்குட நீராட்டுவிழா சிறப்பாக நடைபெற்றது.

இலங்குடி வேளார்கள் இரண்டு வருடங்களாக நகரத்தார்களிடம் திருக் குட நீராட்டு விழா நடந்து 12 ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டதாலும், பகச்சால மூர்த்தி ஐயனார் கோபுரங்கள் பழுதடைந்திருப்பதாலும் மற்ற மராமத்து வேலைகளையும் செய்து திருக் குட நீராட்டு விழாச் செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள்.

காரைக்குடி மேலமடத்தில் 26.6.97 அன்று நகரத்தார்கள் கூடித் திருப்பணி வேலைகளை ஆவணி மாதத்தில் ஆரம்பித்து ஓர் ஆண்டுக்குள் மூன்றாவது திருக்குட நீராட்டுவிழாச் செய்வது என்று தீர்மானம் செய்தார்கள். அன்றைய தினமே காரைக்குடி ஆவி.ப.மு. முரு. குடும்பத்தார் SL.N.S. குடும்பத்தார் மெ.செ.மெ.மெ குடும்பத்தார் சா.நா. நாராயணன் செட்டியார் தேவகோட்டை SML வெள்ளையன் செட்டியார், சு.அரு. சோம சுந்தரம் செட்டியார் மற்றம் கண்டவராயன்பட்டி, மிதிலைப்பட்டி, அமராவதிபுதூர், கூத்தலூர் நகரத்தார்கள் மிகுந்த அளவில் பொருளுதவி செய்வதற்கு முன்வந்தார்கள். 28.10.97 அன்று இலங்குடிக் கோயில் திருப்பணி வேலை தொடங்கப்பெற்றது.

மழைக்காலத்திற்கு முன்னதாகவே ஆவணி மாதத்தில் கண்மாய்க் கரையைப் பலப்படுத்திப் புதிய கரை கட்டியும், முருகன் சந்நதிக்குப் பக்கத்தில் வெளிப்புறச் சுவர்களில் தண்ணீர் ஊற்று எடுப்பதை நிறுத்தியும் இருக்கிறது. மேற்படி வேலைகளுக்கும் சென்னையிலிருந்து ஸ்ரீ கற்பக விநாயகர் கன்ஸ்ட்ரக்ஷன் (பி) லிட், எக்ஸிக்யூட்டிவ் டைரக்டர் Er. T. சுப்பிரமணியன் (நெற்குப்பை) அவர்கள் தங்கள் சொந்தச் செலவில் பல முறை இலங்குடிக்கு வந்து ஆலோசனை கூறினார்கள். அவர்களுடைய உதவியை இங்கே குறிப்பிடக் கடமைப்பட்டிருக்கிறேன்.

திருப்பணி வேலைகள் ஆரம்பிக்கப்பெற்றுச் சாரங்கள் போட்டு வேலை நடந்து கொண்டிருந்த போது பல்வேறு காரணங்களால் நாங்கள் எதிர்பார்த்த அளவிற்கு நிதிவரவில்லை அந்தச் சூழ்நிலையில் நானும், திரு.கி.கரு.ராம.கரு. பழநியப்பன் அவர்களும், புதுப்பட்டி திரு. RM. சதாசிவம் செட்டியார் அவர்களைச் சென்னை குரோம்பேட்டையில் சந்தித்தோம். அவர்களிடம் சென்றவுடன் அவர்களின் பெருந் தொகை தந்ததுடன் வலையப்பட்டி திரு. இராசமாணிக்கம், இளவல் தியாயகராஜன் அவர் களுடன் பேசி அவர்களிடமிருந்து பெருந் தொகை ஒன்றை வாங்கிக் கொடுத்தார்கள். அவர்கள் கொடுத்த ஊக்கத்துடன் மலர்க்குழுத் தலைவரும்திருப்பணிக்குழு உதவித் தலைவருமான செட்டிநாடு சிமெண்ட்ஸ் எக்ஸிக்யூட்டிவ் டைரக்டர் திரு.லெ. சபாரத்தினம் அவர்களிடம் திருப்பணிக்குப் பணம் தேவைப்படுகிறது என்று சொன்னோம். அவர்

களும் உடனடியாக மிகுந்த அளவில் பொருளுதவி செய்ததுடன் மிகுந்த தைரியத்தைக் கொடுத்து எதுவும் பற்றாக்குறை என்றால் அவர்களை வந்து பார்க்கும்படி கூறினார்கள். அவர்கள் தந்த உதவியும் ஊக்கமும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய ஒன்று.

உதவித் தலைவர்கள் திரு. வெள்ளையன் அவர்கள், திரு. மெய்யப்பன் அவர்கள், பொருளாளர் சா.நா. நாராயணன் அவர்கள். இணைச் செயலாளர்கள் KK.RM. பழநியப்பன் அவர்கள் MN.ST. நாகப்பன் அவர்களுடன் நானும் பல ஊர்களுக்கும் சென்று நகரத்தார்களைச் சந்தித்தோம் ஒ. சிறுவயல் திரு. சொ.லெ. அழகப்பச்செட்டியார், கண்டவராயன் பட்டி, அழ.சி.அழகப்பச்செட்டியார், அழ.சி.தியாகராஜன் செட்டியார், காரைக்குடி கரு.கு.மீ. மயில் அண்ணாமலைச் செட்டியார், விராமதி அழகப்பச்செட்டியார் ஆகியோரும் மிகுந்த அளவில் பொருளுதவி செய்தார்கள். அத்துடன் நகரத்தார் பலர் வாழ்ந்து வரும் சென்னை, கோவை, ஈரோடு, திருச்செங் கோடு, திருச்சி ஆகிய ஊர்களுக்கும் சென்று பலரையும் சந்தித்தோம். எல்லோரும் வேண்டிய பொருளுதவி செய்து மிகுந்த ஊக்கத்தையும் தந்தார்கள். இவ்வாறு மிகுந்த அளவில் பொருளதவி கொடுத்துத் திருப்பணிக்கு உதவி செய்த அனைவருக்கும் எங்களுடைய நிர்வாகக் குழுவின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

அம்மான் திரு. நாராயணன் செட்டியார் அவர்களின் பணி மிகவும் குறிப்பிட்டுச்சொல்ல வேண்டிய ஒன்று. பொருளாளர் பொறுப்புடன் தினம் தினம் இலங்குடி சென்று வேலைகளை மேற்பார்த்து மிகவும் சிக்கனமாகச் செலவுகள் செய்து 74 வயதிலும் மிகவும் சுறுசுறுப்பாகச் செயல் பட்டுத் திருக்குட நீராட்டு விழாவும் மண்டலாபிஷேகமும் சிறப்பாக நடைபெற உதவியாக இருந்தார்கள், அவர்களுக்கும் என் நன்றி.

தலைவர் திரு. மு.மெ. முத்துராமன் செட்டியார் அவர்கள் மிகுந்த அனுபவம் உடையவர்கள். அவர்களுடைய ஆலோசனையும், அனுபவமும் திருக்குட நீராட்டும், மண்டலாபிஷேகமும் சிறப்பாக நடைபெற மிகவும் உதவியாக இருந்தது. திரு.N. மெய்யப்பன் திரு. MN.ST. நாகப்பன், திரு. K.K.RM.

பழநியப்பன், திரு.SP.பழநியப்பன், திரு. வீரப்பன், செஞ்சை நாச்சியப்பக் கோனார் முதலியவர்கள் உதவிக்கும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். மற்றும் புது தில்லி மதுரை வங்கியின் மண்டல மேலாளர் திரு.RM. வெங்கடாசலம் அவர்களுக்கும், சத்திரத்தார் குடும்பத்தாருக்கும் குறிப்பாக உதவித்ததலைவர் திரு.SM.L வெள்ளையன் செட்டியார் அவர்கள் யாக சாலை செலவுகளை ஏற்றுக் கொண்டதற்கும், அவர்களுடைய வாகனத்தைத் தந்து உதவியதற்கும் நன்றி. திருக்குட நீராட்டுவிழா மலருக்கு விளம்பரம் தந்து உதவிய அன்பர்களுக்கும் மற்றும் மலர் வெளியிட உதவியாக இருந்த இணைச் செயலாளர் திரு. காப்பியக் கவிஞர் மீனவன் அவர்களுக்கும் எங்கள் நன்றி. இம்மலரை உயர்ந்த முறையில் அழகிய வண்ணத்தில் கட்டணமின்றி அச்சடித்துத் தந்த "மல்டிவிஸ்டா குளோபல் பிரிண்டர்ஸ் லிட்" உரிமையாளர்களும், என் அன்பு நண்பர்களுமாகிய திரு. R. ஜெயராமன், திரு.R.ரவி ஆகியோருக்கும் மேலும் மலருக்கு மேப் லித்தோதாள் இலவசமாகத் தந்து உதவிய KL.N. பேப்பர் ஸ்டோர்ஸ் உரிமையாளர் இராயவரம் PV.RM.KL. இராமநாதன் செட்டியார் அவர்களுக்கும், அவர்கள் பங்குதாரர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இதுபோல் பலவகையிலும் இத்திருக்குட நீராட்டு விழாவிற்கு உதவி செய்த அன்பர்களுக்கும், திருக்குட விழாவன்று அழகுற நேர்முக வர்ணனை செய்த காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் நா. சுப்பிரமணியன் அவர்களுக்கும், மலருக்குக் கட்டுரை, கவிதைகள் உதவிய பேராசிரியப் பெருமக்கள், கவிஞர்கள் ஆகியோர்க்கும் எங்கள் நன்றி என்றும் உரியது.

இலங்குடி அருள்மிகு பகற்சால மூர்த்தி ஐயனார் கோயில் குடமுழுக்கு விழாவைச் சிறப்பிக்கும் வகையில் வெளிவரும் இந்த மலரை ஐயனார் பொற்பாதங்களில் வைத்து வணங்குகிறோம்.

அன்பன்
பழ. சிதம்பரம்
செயலாளர்.

# கருப்பர் காத்திடுவார்

பூதப் பசாசு ரண சாமுண்டி மாதங்கி பிடாரி மகமாயி வீரி

பொல்லாத சாகினி டாகினி மாசான கூளி இருளன் மோகினி

மீதான உதிரக் காட்டேரி கருப்பனும் உயர்மதுரை வீரய்யனும்

முத்துமுனி லாடமுனி குறளி குட்டிச் சாத்தி கூளிசங்கிலிக் கருப்பன்

பேய்பில்லி சூனியம் மந்திரம் தந்திரம் பொல்லாத வடுக சல்லியும்

அயிலத்துளி விதம் தெந்தெனக் கிருகைதனில் அடங்காத ஞானபரனே

ஆதி சதுர் வேதமயில் இலங்குடி தன்னிலே அமர்ந்திடும் மகாதேவனே

அன்பாக எங்களை இரட்சித்து ஆளுவாய் பெரிய கருப்பதுரையே!

கடல் கொண்ட சாராயம் உண்டானால் உன்னுடைய கனகோபம் கனியாகுமோ

காவேரி கொள்ளிடம் பெருகி வந்தாலும் உன் கனியிதழ் நுனி நனையுமோ

வடமேரு மைநாக மலை பூசை கொள்ளினும் கடவாய் கடுக்காகுமோ

மதிக்கின்ற கஞ்சாவும் புகையிலையும் மதுவுண்ண மயக்கமது காணுமோ

நெடிதான உன் அளவு உதிரப்பலி கொண்டாலும் உன் நெடிய வயிறது நிறையுமோ

நித்தம் வெகு கோடி பெண் போகமது செய்தாலும் உன் நெறிகாம வெறி நீங்குமோ

அடியவர் துதிக்கின்ற இலங்குடி தன்னிலே அமர்ந்த மகாதேவனே

அன்பாக எங்களை வந்து இரட்சித்து ஆளுவாய் பெரிய கருப்ப துரையே

| ந<br>ம<br>சி<br>வா<br>ய | *நம சிவாய என்னும் பஞ்சாட்சரத்தின் ஐந்து எழுத்துக்களும் சிவனே, அச்சிவனை நான் வணங்குகின்றேன். அவன் நாகேந்திரனை மாலையாகக் கொண்டவன்; முக்கண்ணன்; வெண்ணீறு பூசுபவன்; மகேசுவரன்; நித்தியன்; திசைகளை ஆடையாக உடையவன்*<br><br>*மந்தாகினி நதியின் நீரும் சந்தனமும் அவனைப் பரிசுத்தமாக்குகின்றன. நந்தியின் நாதன் அவன்; பூதேசுவரன்; மந்தாரை மலர்களும்; பிற மலர்களும் அவனை அணி செய்கின்றன.*<br><br>*ஆதிசங்கரர்.* |
|---|---|



கோபுரக் கலசமீது கும்ப நீர்
சொரியும் காட்சி



கமல வேதிகையில் கலசங்கள்
இருக்கும் காட்சி



அருகினில் தேவிமார்கள் அழகுடன்
வீற்றிருக்க ஐய்யனார் யானை மீ து



நோக்கு வார்தம்மைக் காக்கும்
நொண்டிக் கருப்பர் தெய்வம்

# நகரக் கோயில்கள்

## காப்பு

ஒன்பான் திருக்கோயில் உள்ள நகரத்தார்
அன்பாய் வணங்கி வரும் ஆனைமுகா - ஒன்பது நற்
கோவில் இருப்பாரைக் கொண்டாடும் பாப்பாட
நாவில் நீ வாராய் நயந்து

## இளையாற்றங்குடி

ஏர்திகழும் சிற்றூர் இளசைப் பெரும்பதியில்
கார்திகழும் சென்னிக் கயிலாச நாதருடன்
பேர்திகழ வீற்றிருக்கும் நித்யகல் யாணியெனும்
சீர்திகழும் அன்னையவள் சேவடிகள் போற்றுவமே.

## மாற்றூர்

அமரரெலாம் வந்துபணி அழகுஐற்நூற் றீசருடன்
இமவானின் திருமகளாம் எழிற்பெரிய நாயகியாள்
தமைப்பணிவார்க் கருள்பெரிய தடந்திகழும் மாற்றூரில்
நமக்கென்றே இருந்தருள்செய் நாயகிதாள் போற்றுவமே

## வயிரவன் கோவில்

உயரியநல் வடிவுடையார் உடனாய வளரொளியார்
பயில்கின்ற பெருங்கோயில் பாண்டியன் செய் திருக்கோயில்
வயிரவன்தன் திருக்கோயில் வந்தமர்ந்தே அருள்புரியும்
வயிரவனார் தாளிணைகள் வாழ்வுதரப் போற்றுவமே

## இரணிக்கோயில்

அழகியநற் சிவபுரத்தாள் ஆட்கொண்ட நாதருடன்
எழில்பெறவே இருந்தருளும் இரணியூர்த் திருப்பதியில்
அழகியநற் சிற்பங்கள் அமைந்ததொரு திருக்கோயில்
வழிவழியாய் நாள்தோறும் வளம்பெறவே போற்றுவமே

## பிள்ளையார் பட்டி

வாடா மலர்மங்கை வணங்கவரு மருநீசர்
தேடரிய திருவீசர் திருத்திகழும் சிவகாமி
பீடாரும் கற்பகப் பிள்ளையார் தலைமைகொளப்
பாடுபுகழ்ப் பிள்ளையார் பட்டிநிதம் பணிவோமே

## நேமம்

காமனையே தன்விழியால் கனலாக்கி முன்னாளில்
சேமமுற வெற்றிச் செயங்கொண்ட சோழீசர்
நேமநகர்ச் சவுந்தரத்தாய் நேர்த்தியுள்ள பெருமாட்டி
நாமங்கள் சொல்லியவள் நல்லடிகள் போற்றுவமே

## இலுப்பைக்குடி

ஏற்றமுள்ள சிற்றூராம் இலுப்பைக் குடியுகந்தான்
ஏற்றுக் கொடியுடைய தான்தோன்றி ஈசனுடன்
சாற்றுபுகழ் கொண்டவளாம் சவுந்தரநல் நாயகிதன்
மாற்றறியாப் பொன்னடிகள் மனம்வைத்துப் போற்றுவமே

## சூரைக்குடி

சூரைக் குடிநகரார் சொந்தமெனக் கொண்டாடும்
காரைக் குடித்தசடைக் காடுடைய தேசிகனார்
சீரைத் தருமினிய செல்வமலி ஆவுடையாள்
ஈரத் திருவடிகள் என்றென்றும் தொழுகுவமே

## வேலங்குடி

கைதொழுவார்க் கருள்புரியும் கண்டீசர் தம்முடைய
மெய்பாதி கொண்டதொரு மெல்லியலாள் காமாட்சி
மைவண்ணத் திருவிழிகள் மழைபோல் கருணைதர
மொய்குழலாள் பாதமலர் முப்போதும் வணங்குவமே

*காப்பியர் கவிஞர் - நா. மீனவன்*

## 'ஆசை அறுமின்கள்'

பொன்மழை இல்லத்தில் பொழிந் தாலும் ஆசை அடங்கா இயல்பு டையது. ஆசை மிகுதியால் சேர்ந்த பொருள்கள் தருகின்ற இன்பம் சிற்றின்பம் - அதன் விளைவு இறுதியில் துயரத்திற்கே துணையாகும்.

அவாவினால் உண்டாவது தீமை - நம் வாழ்வில் வேரூன்றிய இத் தீமையின் வேர்கள் நச்சு மரங்களின் வேர்கள்.

எனவே தான் திருமூலர் பெருமான் தம் திரு மந்திரத்தில் 'ஆசை அறு மின்கள், ஆசை அறுமின்கள், ஈசனோடாயினும் ஆசை அறுமின் கள்' என்று பாடினார்.

## வாழ்த்து

திருவார் இலங்குடி செய்யபகச்சால

தருவாரும் அய்யனார் தாளை -

ஒருவாறு

கண்டு வணங்கினோர் காசினியில்

ஓங்கியே

தண்டமிழ்போல் வாழ்வார்

தழைத்து

அமரர் திருமுருக கிருபானந்த

வாரியார்

## ஓசையும் ஒலியும்

'சேவலும் மயிலும் துணை' என்ற மந்திரம் செந்தூரானை வணங்கு வோர் சொல்லும் மந்திரம் கோழி முருகனின் கொடியானது. மயில் அவனுக்கு ஊர்தியானது.

மூன்று மயில்கள் முருகனுக்கு ஊர்தியாயின என்பது புராணம். சூரனை அழிக்குமுன்பு ஒரு மயில் இருந்தது. இந்திரன் வடிவேல னுக்கு இரண்டாவது மயிலாகி னான். வேலவனுடன் போரிட் டோடிய சூரபதுமன் கடலிடை மாமரமாய் ஒளிந்தான். வெற்றி வேல் அவனுடலை இரு கூறாய்ப் பிளந்தது. அழியா யாக்கை பெற்ற வன் ஆதலின் அவனுடலில் ஒரு பாதி சேவலாகவும் மறு பாதி மயிலாகவும் மாறிவர முருகன் அவற்றை ஆட்கொண்டு முறையே கொடியாகவும் ஊர்தியாகவும் கொண்டனன். எனவே சூரன் முருகவேளுக்கு மூன்றாம் மயில்.

மயில் சாயலால் அழகுடையது. மாயையின் முழு வடிவம் என்பர் மயிலை. சேவல் கூவும் இயல் புடையது எனவே ஓசையிடும் காரணத்தால் நாத தத்துவம். மயில் கண்கவர் ஒளியுடைய தாகையால் விந்து தத்துவம் என்பர். எனவே தான் அருணகிரி நாதர் தம் திருப்புக ழில் 'நாத விந்துகலாதீ நமோ நம்' என்று பாடினார்

காப்பியர் கவிஞர் மீனவன்

## தூண்டு கோல்கள்

சமுதாயத்திற்கு மிகவும் பயன்

தரும் அம்சம், பலவகைச் சமயம். பல்வேறு ஜாதிகள், கிளைப் பிரிவுகள், உடையலங் காரங்கள், கருத்துக்கள் கொண்ட நாடு தனது பண்பாடு, நாகரிகம், கலைகள் மற்றும் பரந்த தேசத்தின் பாதுகாப்பு இவற்றை ரிஷிகள், பெரும் துறவி யர்களின் பலத்தால்தான் ஏற்படுத் திக்கொண்டுள்ளது.

துறவியர்களும், ரிஷிகளும் ஆன் மிக உணர்வு நல்கும் செய்தியாளர்க ளாக உலகம் முழுவதையும் நன்மை அடையச் செய்திருக்கின்றார்கள். அவர்களது தியாகம், உயிர்த் தியாகம், பெரும்தவம், தன்னல மற்ற சேவை மற்றும் அகிம்சை, சத்தியம் முதலிய சாதனைகள் மனித சமுதாயம் முழுவதற்கும் எப் பொழுதும் பெரும் தூண்டுதல்க ளாக இருந்திருக்கின்றன. ஒரு மா பெரும் குறிக்கோளில் இணைந்த அவர்களது தனித்தன்மை சமுதாயத் திற்கு மிகப் பெரிய தொண்டு ஆகும். மனித சமுதாயத்தின் முன் னேற்றத்திற்கும் பெரும் புகழுக்கும் என இத்தகைய ஒரு பிரிவினர் ஏற்பட்டனர். இன்றும் கூட அவர் கள் முன்போலவே தேவைப்படு கின்றனர்.

## இறை உணர்வு

இறைவனைத் தேடும் பக்தர்கள் தானம் செய்ய வேண்டும் என்று ஆச்சாரியார் வலியுறுத்துகிறார். இதைக் கண்ணும் கருத்துமாய்க் கடைப்பிடிப்போர் கூட இதன் பொருளைப் பல சமயங்களில் தப்பாகப் புரிந்து கொண்டிருக்கிறார் கள். ஒருவனின் சொந்த சுபிட்சத்தி லிருந்துதான் 'தானம்' என்பது வர வேண்டும். ஆகவே ஒருவனுடைய முதல் வேலை போதுமான அளவுக் குப் பொருளீட்டப் பாடுபடுவது தான். அப்போதுதான் இல்லாத ஒருவனுடன் தன்னிடம் இருப் பதைப் பகிர்ந்து கொள்வது சாத்திய மாகும்.

நான் என்னையே விரிவு படுத்திக் கொள்ளும் ஒரு முயற்சியின் பெயர் தான் தானம் என்பது. அதன் மூலம் என்னைச் சுற்றியுள்ள எல்லோரை யும் என் வாழ்க்கை எல்லையின் கீழ் அணைத்துக் கொள்கிறேன். அடுத்த வனின் தேவையையும், முடையை யும் என் சொந்தத் தேவையையும் முடையையும் போலக் கருதக் கூடியவனாக வளர்கிறேன். குறைந்த பட்சம் எனக்கு அருகில் உள்ளோரு டனாவது ஓர் ஒருமையை ஏற்படுத் திக் கொண்டு வாழ முயலுவதால் மூச்சுத் திணறடிக்கும் சுயநலத்தி லிருந்தும், தேக உணர்வு என்ற கிடுக்கிப் பிடியிலிருந்தும் விடு பட்டு வாழத் தொடங்கிகிறேன். அடுத்துள்ளவனின் தேவையைப் புறக்கணித்து வாழ்வது மதமல்ல.

எந்த இருதயம் உறுதியுடன் தன்னைத் தானே திறந்து கொண்டு தன் விசால மண்டலத்தினுள் வரு மாறு அன்பான சகோதரத்துடன் அனைவரையும் அழைக்கிறதோ அந்த இருதயத்தில்தான் மதத்தின் மலர்ச்சி கிட்டும்.

- ஸ்ரீ பஜ கோவிந்தம்

## நம்பிக்கை

இறந்தவர் ஒரு நாளும் மீள்வ தில்லை. கழிந்த இரவு மீண்டு வரு வதில்லை. கடல் பொங்குவதால் எழுந்து ஓய்ந்த அலை புத்துயிர் பெறுவதில்லை. இவை போலத் தான் ஒரு மனித ஆத்மா ஒரு முறை விட்டுச் சென்ற அந்த உடலுக்குள் மறுமுறை வந்து உறைவதில்லை. எனவே மனிதனே! மறந்துபோன, இறந்து போன பழங்காலத்தை வழி படுவதை விட்டுவிட்டு, இந்தக் கணக்கில் நடக்கும் நிகழ் காலத்தை வழிபட உன்னை அழைக்கிறோம். முதலில் உன்னிடத்தே நம்பிக்கை வை. பொருள் படைத்த செல்வரான உயர்நிலையினரிடமிருந்து எதை யும் எதிர்பாராதே. உலகில் நிகழ்ந்த அசாதாரண மாபெருங் காரியங்கள் அனைத்தையும் இயற்றியவர்கள் ஏழைகளே. நிலையாயிரு. அனைத் துக்கும் மேலாகத் தயாராயிரு. முது கெலும்பு வரை உண்மையாயிரு. உன் விதியில் நீ நம்பிக்கை வை.

-சுவாமி விவேகானந்தர்

# புறம்பணையான் கோட்டம்

**தமிழாகரர் தெ. முருகசாமி**
முதல்வர்
இராமசாமி தமிழ்க் கல்லூரி
காரைக்குடி 630 003

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளால் உணர்த்தப்பட்ட பல கோயில்களுள் 'புறம்பணையான் வாழ் கோட்டம்' என்பதும் ஒன்று. இது ஊருக்குப் புறம்பே உள்ள இடத்தில் ஊர் காக்கும் தெய்வமாகக் காணப்படும் ஐயனார் கோயிலைக் குறிப்பதாகும். இதனை 'ஐயனார் காவு' என்றும் கூறுவர். 'காவு' என்பது காத்தலைக் குறிக்கும். ஊரையும் ஊரைச் சார்ந்த ஏரி, குளம், வயல்கள் முதலியவற்றையும் காக்கும் தெய்வமாக உள்ளதால் ஊர்ப்புற நீர்த் துறைக் கரையோரங்களில் இந்த ஐயனார் வழிபாடு நடப்பது வழக்கமாகும். தமிழ் நாட்டில் காணப்படும் ஐயனார் காவு என்பதைப் போலவே மலையாளத்திலும் 'கோ சாஸ்தா காவு' என்ற கோயில்கள் கிராமந்தோறும் உள்ளன.

தமிழில் கூறப்படும் சாத்தனும் மலையாள சாஸ்தாவும் ஒன்றே. சாத்தனுக்கு ஐயனார் என்ற பெயரும் உண்டு காத்ததற்குரிய கடவுளரில் சாத்தனும் ஒருவன் என்று பன்னிரு பாட்டியலின் 106 ஆம் நூற்பா கூறுகிறது. ஊர்த் தேவதையான ஐயனார் இரவுக்காலத்தில் குதிரையேறி ஊரை உலா வந்து காவல் செய்வதாக வழிவழியாக நம்பப்படுகிறது. அங்ஙனம் உலா வருங்கால் சில பரிவாரதேவதைகளும் உடன் வருவதாகக் கூறுவர்.

ஐயனாராகிய இச்சாத்தனைச் சிறு தெய்வமாக வழிபட்டாலும் பெருந் தெய்வக் கூட்டுறவால் உருவான புதிய தெய்வப்படைப்பாகக் கருதப் பட்ட குறிப்பு கிபி. 6 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பரடிகளின் தேவாரத்தில் காணப்படுகிறது.

பார்த்தனுக் கருளும் வைத்தார்
பாம்பரை யாட வைத்தார்
சாத்தனை மகனா வைத்தார்
சாமுண்டி சாம வேதங்
கூத்தொடும் பாட வைத்தார்
கோளரா மதியம் நல்ல
தீர்த்தமும் சடைமேல் வைத்தார்
திருப்பயற் றூர னாரே!

இத்திருப்பயற்றூர்ப் பாடலில் சிவபெருமான் சாத்தனைத் தன் மகனாகச் செய்த செயல் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது. இக்குறிப்பை மோகினி அவதாரம் எடுத்த திரு மால் சிவபெருமானை அணுகிய போது தோன்றியதாகக் கூறப்படும் சாஸ்தா கதையின் மூலமாகக் கருத லாம்.

திருமால் எடுத்த மோகினி அவதார மும் சிவன் கொண்ட பிச்சாடனர் அவதாரமும் புராணங்களில் காணப் படுகின்றன. ஆனால் இவ்விரு வேறு அவதாரங்களின் கூட்டுற வால் உருவான அரிகரபுத்திரத் தோற்றம் பற்றிய புராணக்கதை வடமொழி வேதங்களிலோ புரா ணங்களிலோ காணப்படவில்லை. வேதங்களுக்கும் புராணங்களுக்கும் புறம்பாக இப்படியொரு கூட்டு தெய்வ வழிபாடு ஏதோ ஒரு தேவை யைக் கருதி ஏற்பட்டதாகத் தெரி கிறது.

இறை நம்பிக்கையற்ற பகுத்தறிவு சமயங்களாகத் தோன்றிய பௌத்த சமண சமயங்கள் தங்கள் கொள்கை களைப் பரப்பிய காலத்தில் அவற் றைத் தடுப்பதற்காக விரும்பியோ விரும்பாமலோ சைவ வைணவச் சமயங்கள் ஒன்றுபட வேண்டிய தேவை ஏற்பட்டது. இதனால் பெருந் தெய்வ வழிபாட்டின் நெகிழ்த்தன்மை கலப்புத் தெய்வ வழிபாட்டிற்கு வழி வகுத்தது எனலாம். எனவே புறச் சமயத் தாக்குதலால் பழங்குடி மக்களின் சமய உணர்வுகளை மீட்டுருவாக்கக் கருதியே அரிகர புத்திரக்கலப்புத் தெய்வ வழிபாடு பக்தி இயக்கத் திற்குத் துணை செய்தது.

கிராம தேவதையான ஐயனார் கோயிலில் மண்ணாலான குதிரை களும் யானைகளும் காணப்படுகின் றன. ஐயனாரோடு குதிரைக்கும் யானைக்கும் தொடர்புள்ளதோடு மண்ணால் இவைகள் செய்து வைக்கப்படுவதற்கும் காரணங்கள் உள்ளன.

கி.பி 10 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த திவாகர நிகண்டில் ஐயனாரின் பெயர்களாக், காரி, சாத்தன், சாதவா கனன் எனப் பல காணப்படுகின் றன. திவாகர நிகண்டிற்குப் பின் தோன்றிய பிங்கலந்தை நிகண்டி லும் ஐயனாரை வெள்ளையானை வாகனன், சாதவாகனன். செண்டாயு தன், அறத்தைக் காப்போன் என்ப தாகக் கூறப்படுவதைக் காணலாம்.

இவ்விரு நிகண்டிலிருந்தும் பொருத்தமான ஓர் உண்மை காணப் படுகிறது. குதிரையெறி வரும் சாத வாகனன் என்ற பெயர் ஐயனாருக்கு உண்டு என்பதே அவ்வுண்மை யாகும். யானையும் வாகனமாக உண்டு என்ற உண்மையைப் பிங்க லத்தை கூறுவதால் யானையும் குதிரையும் ஐயனாருக்கு வாகனங்க ளாகக் கருதப்பட்டன எனத் தெரி கிறது.

வடநாட்டுச் சமயங்களான சமண பௌத்தங்களின் சமய வழிபாட்டில் முறையே குதிரை வாகன தேவதை யும் யானை வாகன தேவதையும் காணப்படுகின்றன. இக்குதிரையும் யானையும் மண்ணால் செய்யப்பட் டதற்குச் சில குறிப்புகளும் காணப் படுகின்றன.

உஜ்ஜைனியை ஆண்ட விக்கிரமா தித்தனது தலைநகரான பிரதிஷ்டான புரத்தில் ஒரு குயவன் வீட்டில் சாத வாகனன் என்ற குழந்தை விக்கிரமா தித்தனுக்கு எதிரியாக வளர்ந்து வந்தது. இக் குழந்தையின் தெய்வீக ஆற்றலை உணர்ந்த வேதாளம் விக்கிரமாதித்தனிடம் சென்று எதிரியை முளையிலேயே கிள்ளி எறிய வேண்டும் என யோசனை சொன்ன படி அக்குழந்தையைக் கொல்லத் திட்டமிடப்பட்டது. ஆனால் அக் குழந்தையோ தாம் வைத்து விளையாடிய மண்ணா லான குதிரை, யானை பொம்மை கள் மீது மந்திரத்தைக் கூறி ஏவி விடவும் விக்கிரமாதித்தன் படை கள் தோல்வியடைந்தன. சாத வாகனன் வெற்றி பெற்றான். இச் சாதவாகனனே பௌத்த தேவதை யாகக் கருதப்பட்டான்.

இப்பௌத்த சாதவாகனனைப் போலவே சமண நூலாகிய பெருங் கதையில் சாதகன் என்ற தேவதை குறிக்கப்படுகிறது. இது குயவர் குல மரபைச் சார்ந்ததாகப் பேசப்பட்டுள் ளது. வடமொழி குலால சாத்திரத் தில் சாத்தனுக்கும் குயவர்களுக்கும் உள்ள தொடர்பு பலவாறாகக் காணப்படுகிறது. இதனால் குலால சாத்திரச் சாத்தனும் பெருங்கதைச் சாதகனும் ஒருவனே என உணர லாம்.

சங்க காலத்தில் சாத்தன் என்ற பெய ரில் பல புலவர்கள் காணப்படுகின் றனர். பிற்கால இலக்கண உரையா சிரியர்கள் சாத்தன், சாத்தி என்ற பெயர்களை எடுத்தாண்டுள்ளனர்.

சாத்தனை அறம் காப்போன் என நிகண்டுகள் கூறுவதற்கேற்பப் புற நானூற்றில் பிடவூர் அறப் பெயர்ச்

சாத்தன்" என அறத்தொடர்புடைய கடவுளாகச் சாத்தன் பேசப்பட்டுள்ளான்.

நெடுங்கை வேண்மான் அருங்கடிப்
பிடவூர் அறப்பெயர்ச் சாத்தன் - 395

இப்புறநானூற்றுத் தொடர் சாத்தனை வேண்மான் தெய்வமாகக் கூறுகிறது. வேண்மான் என்பது வேட்கோவைக் குறிக்கும். மட்கலம் வனையும் குயவரை வேட்கோ என்பர். மண்ணாளும் வேந்தரை "வேள்" என்பதைப் போல மண்ணைத் தொழிலாகக் கொள்ளும் குயவர்க்கும் வேள் என்ற பெயர் அடைய, மண் சார்ந்த வாழ்வு உடையோர் வேளார் (வேள்+ஆர்) எனப்பட்டனர். எனவே சாத்தன் என்னும் கடவுள் மரபினராகக் (வேளார் என் அழைக்கப்படும்) குயவர்கள் கருதப்பட்ட குறிப்பு 395 ஆம் புறநானூற்றுப் பாடலால் உணரக் கிடக்கிறது.

மேலும் இவர்கள் கோயிற் பூசாரியாக இருந்த குறிப்பும் நற்றிணை என்னும் எட்டுத் தொகை நூலால் அறியமுடிகிறது.

'சாறு எனநுவலும் முதுவாய்க் குயவ'- (200) எனக் கூடலூர்ப் பல் கண்ணனாரும்

'முது குயவன் இடுபலி நுவலும்
அகன்தலை மன்றத்து விழவு' - (293)

எனக் கயமனாரும் கூறுவதால் புறநானூறு உணர்த்தும் சாத்தன் என்னும் கடவுள் மரபினரான வேளார்கள் அச்சாத்தன் கோயில் வழிபாட்டில் பூசாரிகளாகவும் இருந்தனர் என அநுமானிக்கலாம். இன்றும் செட்டி நாட்டுப் பகுதியில் உள்ள ஐயனார் கோயிலின் பராமரிப்பும் வழிபாடும் வேளாரின் தொடர்பால் மிகுதியும் உள்ளன என்பதால் சங்க காலத்திய கருத்து உண்மை என உறுதிப்படுகிறது.

ஆக, சமயப்பாதுகாப்பின் பொருட்டு உருவான கூட்டுத் தெய்வமாகவும் (சிறு தெய்வம்) மண்ணின் மரபினோரால் போற்றிவந்த வீரம் மிக்க ஊர்க்காவல் படைத் தலைவனாகவும் (ஐயன்) சாத்தன் கருதப்பட்டதால் அவனை ஐயனாராக ஊர்ப் புறம்பே வைத்து மக்கள் கொண்டாடினர். தன்னை வழிபடுவாரை விட்டுப் புறம்பு அணையான் (புறம் போகாமல் காப்பான்) என்ற பொருட் செறிவான குறிப்பும் "புறம்பணையான்" என்ற சொல்லில் பொதிந்து கிடப்பதால் அவனை வழிபட்டு உய்வோமாக!

# பகற்சால மூர்த்தியே பார்

பேராசிரியர், டாக்டர்.அர. சிங்கார
வடிவேலன் (எ) அரசி
கண்டனூார்

காரைக் குடியருகே கண்கவரும் மானகிரி
ஊருக்கும் நாச்சி புரத்துக்கும் ஊடாய்
இலங்கும் குடியில் எழுந்தருளும் தேவே!
துலங்கும் வழியைத் துலக்கு.

பகச்சால மூர்த்தி பகவானே! ஐயா!
மிகச்சிறப்பாய் உன்கோயில் மேலே - தகதகக்கும்
பொற்கலசம் ஏற்கும் புனிதத் திருநீறாய்
அற்புதங்கள் சேர்ப்பாய் அடுத்து

ஐயனார் கோவில் அறப்பணியும் செய்பவரும்
வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தோங்கப் - பொய்யறியாச்
சிங்கார வேலன் நான் செந்தமிழால் வாழ்த்துகிறேன்
மங்கலமாய் வாழ்க மகிழ்ந்து

நலங்கள் நிறைந்தென்றும் நற்குடிகள் வாழும்
இலங்குடியில் என்றும் இருப்பர் - வளம் கொழிக்க
ஐயன் பகற்சாலர் அம்மை இருவருமே
கையடைய ஈவார் கனி

கனிவான பேச்சு கரவில்லா உள்ளம்
திணிவாம் உடல்வாகு சேர்ந்து - பணிவாய்ப்
பகற்சால மூர்த்தியம்மை பாதம் பணியின்
செகம்வாழும் என்றும் செழித்து

செழிப்பிற் குறைவில்லை; செய்தொழில்கள் யாவும்
கொழிக்கும் மனம் தான் குறையாம் - பழிக்கஞ்சு
செகச்சாலம் தோற்கச் செம்மையறம் வெல்லப்
பகற்சால மூர்த்தியே பார்

# நகரத்தார் பெண்துறவியர் இருவர்

டாக்டர். திருமதி நா. வள்ளி,

இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி 630 003

காரைக்கால் அம்மையின் வழி வந்த நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்த பெண்கள் இயல்பாகவே சமயப்பற்று மிக்கவர்கள். தலங்கள் தோறும் சென்று இறைவனை வழிபடுவதையும், ஆடி அமாவாசை, தை அமாவாசை, ஐப்பசி முதல் முழுக்கு, கடை முழுக்கு ஆகிய நாட்களில் புண்ணிய நதிகளில் தீர்த்தமாடுவதையும் கும்பாபிடேகம், திருவிழாக்கள் காணச் செல்வதையும் சிறந்த வழக்கங்களாகக் கொண்டுள்ளனர். நகரத்தார் பெண்கள் கட்டிய கோயில்களும், புதுப்பித்த கோயில்களும், கோயில்களில் ஏற்படுத்திய கட்டளைகளும் பல. கோயில் திருப்பணிகளோடு மடங்கள், நந்தவனங்கள், ஊருணிகள் ஆகிய திருப்பணிகளிலும் நகரத்த ார் சமூகப் பெண்கள் ஈடுபட்டுள்ளனர்.

இங்கு, சமயப்பயிற்சியும் சமூகப் பணியும் ஆற்றிய, நகரத்தார் இனத்துப் பெண் துறவிகள் இருவரைப்பற்றிய செய்திகள் சொல்லப்பட்டுள்ளன.

உத்தரஞான சிதம்பரம் என்றழைக்கப்படும் வடலூரில் 'தெய்வானை ஆச்சியடிகள் மடம்' என்றொரு மடமுண்டு. இம்மடத்தில் சமாதி கொண்டுள்ள தெய்வானை ஆச்சியடிகள் கி.பி 1870 இல் அரிமளத்தில் மாத்தூர் (அரும்பாக்கூர்) கோயிலைச் சேர்ந்த இராம. பழ. பழனியப்ப செட்டியாருக்கு மகவாகப் பிறந்தார்கள். தக்க பருவம் வந்ததும் அரிமளத்திலேயே மாத்தூர் கோவில் கருப்பூர்ப்பிரிவில் சி.சு. சுப்பிரமணியஞ்செட்டியார் என்பவருக்கு வாழ்க்கைப்பட்டார்கள். மணம் முடித்த சிறிது காலத்திலேயே தேசயாத்திரைக்குச் சென்ற கணவர் அங்கேயே இறைவனடி சேர்ந்துவிட்டார்.

பின்பு தெய்வானை ஆச்சி சிவ கைங்கரியத்தில் மிக முயற்சி

யுடையவர்களாக இருந்தார்கள். அரிமளத்திலுள்ள கோடக நல்லூர் சுந்தரசுவாமிகள் மடாலயத்திற்குச் சென்று பாடம் கேட்டும், அங்குள்ள சாதுக்களுக்குத் தொண்டு செய்தும், தம் இல்லத்தில் அடியாரை உண்பித்தும் வந்தார். அவர் இரவில் ஏகாந்தமாயிருந்து சிவபஞ்சாட்சர தியானம் செய்துவரும் காலத்தில் அக்கினி போன்ற ஒரு பிரகாசம் தோன்றுவதும் சிலநேரம் கழித்தபிறகு மறைவதுமாயிருக்குமாம்.

இப்படியிருந்து வரும் காலத்தில், சுந்தரசுவாமிகள் மடத்திற்கு வந்த நித்தியானந்த சுவாமிகள் என்பவர் தெய்வானை ஆச்சிகளைப் பார்த்து, 'இது தூக்கி வைத்தால் நிற்கும்' என்று பரிபாஷையாகச் சொல்லிச் சென்றிருக்கிறார். இவ்வாறிருக்கையில் ஒரு சமயம் சுந்தரசுவாமிகள் மடத்திற்கு வந்திருந்த இராதா கிருஷ்ண சுவாமிகள் என்று பெரியார் திருவருட்பாவைப் படிக்கக் கேட்டு ஆனந்தமடைந்து, வடலூர் வள்ளலார் மீதும், சமரசசன் மார்க்கத்தின் மீதும் ஈடுபாடு கொண்டு வடலூர் சென்று 1921 ஆம் வருடம் ஜூலை மாதம் 20 ஆம் தேதி அங்கு ஒரு மடத்தைத் தோற்றுவித்து அதன் வாயிலாகச் சமயப்பணியும் சமுதாயப் பணியும் ஆற்றிவந்தார். தெய்வானை ஆச்சியடிகள். மடத்தில் பூந்தோட்டம் அமைத்து விருத்தி செய்து சிவார்ச்சனைக்கு வேண்டின மலர்கள் மாலைகள் கொடுத்தும், சாதுக்களுக்கும் ஏழைகட்கும் பசிக்குறிப்பு அறிந்து அதனை நிவர்த்தி செய்ததுடன், வஸ்திரம் இல்லாதவர்களுக்கு வஸ்திரம் கொடுத்தும் புண்ணிய ஸ்தல யாத்திரை வாசிகளுக்குப் பொருளுதவி புரிந்தும் வந்த தெய்வான ஆச்சி பவ வருடம் ஐப்பசி மாதம் இருபத்தேழாம் தேதி. சிவசமாதியடைந்தார்கள். வடலூரில் அவர்கள் தோற்றுவித்த மடத்திலேயே அவர்களுக்குச் சமாதி வைக்கப்பெற்று வழிபாடும் குருபூஜையும் நடந்து வருகிறது.

மற்றொரு நகரத்தார் குலப்பெண் மணியாகிய முத்துக்கருப்பி ஆச்சி என்பவரின் சமாதி காரைக்குடியிலிருந்து தேவகோட்டைக்குப் போகும் சாலையில் வலதுபுறம் தேனாற்றங்கரைக்கு அருகில் உள்ளது. 20.8.95 அன்று கும்பாபிஷேகம் நடைபெற்றது. காரைக்குடியில் வாழ்ந்து சிவபக்தி, அடியார்

பக்திகளில் சிறந்து விளங்கி, நீண்ட நாள் தொண்டுபுரிந்து சிவ சமாதி அடைந்திருக்கும் இவர் ஆலம் பட்டு என்னும் கிராமத்தில் (தற்போது நகரத்தார் வசிக்கும் ஊர்களுள் ஒன்றாக 'ஆலம் பட்டு' இல்லை. ஆனால் முன்பு இவ்வூரில் நகரத்தார்கள் வசித்திருக்கிறார்கள். காலப்போக்கில் அங்கிருந்து காரைக்குடி போன்ற ஊர்களுக்குக் குடி பெயர்ந்திருக்கிறார்கள். இதற்குச் சான்றாக காரைக் குடியிலுள்ள 'ஆலம்பட்டார் வீடு' என்பதைக் காட்டலாம்) மாற்றூர்க் கோயில் அரும்பாக்கூர்ப் பிரிவில் கும. பழனியப்பச் செட்டியார் என்பவரின் புதல்வியாக 1852, ஆவணி மாதம் 5ஆம் தேதி பிறந்தார்கள். காரைக் குடியில் 'தேனப்பய்யா வீடு' என்றழைக்கப்படும் வீட்டில், வயிரவன் கோயில், பிள்ளையார் வகுப்பு, தெ.பழ. பழநியப்ப செட்டியார் புத்திரன் பழ.தே. தேனப்ப செட்டியாரவர்களை 1870-இல் தனது பத்தொன்பதாவது வயதில் மணந்தார்கள்.

இவர்கள் பொருட்செல்வம், அருட்செல்வம் புத்திரச் செல்வம் முதலிய எல்லா நலன்களும் பெற்று இல்லறமாகிய நல்லறத்தை இனிது நடத்தி வந்தார்கள். குழந்தை வளர்ப்பிலும், வைத்தியத்திலும் தேர்ச்சி பெற்ற இவர்களது இல்லம் ஒரு குழந்தைகள் மருத்துவச் சாலையாக்வே விளங்கியது. நாள்தோறும் சிவபூஜை செய்து, விரத நாட்களில் விரதங்கள் அனுட்டித்து அடியார்களுக்கு அன்னமிட்டு வந்தார்கள். துறவிகளிடத்தும் சிவனடியார்களிடத்தும் பக்தி சிரத்தையுண்டு.

இந்தியாவில் இவர்கள் வழிபடாத தலங்களே இல்லை எனலாம். வடநாட்டிலுள்ள பத்ரி நாராயணம், பத்ரி கேதாரம், இலங்கையிலுள்ள கதிர்காமம், திரிகோணமலை முதலிய தலங்களையும் தரிசித்திருக்கிறார்கள். தீர்த்தம் ஆடுவதிலும் யாத்திரை செய்வதிலும் அளவிலா விருப்புடையவர்கள்.

இவர்களுடைய கணவர் 1909 இல் காலமான பிறகு, இவர்கள் விபூதிருந்திராட்சதாரணராய்ச் சிவபக்தியில் திளைத்திருந்தார்கள். தஞ்சாவூருக்கு அடுத்த மாரியம்மன் கோயில் சமீபம் புலவநத்தம் என்னும் கிராமத்தில்

சிவசமாதியடைந்திருக்கும் இராமசாமி சுவாமிகள் என்ற மௌனகுருசுவாமிகள் இவர்களுடைய ஞானகுரு ஆவார்கள். குருவின் ஆணையின் பேரிலேயே தற்போது இவர்கள் சமாதியாயிருக்கும் இடம் வாங்கப் பெற்றது. வெகுதானிய வருடம் ஆவணி மீ 5 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை சன்யாசம் பெற்ற முத்துக் கருப்பி ஆச்சி தொண்ணூற்றிரண்டு ஆண்டுகள் வாழ்ந்தார்கள். தனது 92 ஆவது வயதில் ஏகாதசி திதி, திருவாதிரை நட்சத்திரத்தில் சிவ சமாதியடைந்தார்கள். அப்போது எங்கும் அரகர முழக்கமும் தேவார திருவாசகம் ஒலியும் நிறைந்திருந்தது. விசேட ஊர்வலத்துடன் இரதத்தில் ஆரோகணித்துச் சிவநாம முழக்கத்துடன் கொண்டுவந்து, கோவிலூர் மடாலயத்திலிருந்தும் பல மடாலயங்களிலிருந்தும் வந்திருந்த சாதுக்களும், பெரியவர்களும், பொதுமக்களும் வாழ்த்தத் தேனாற்றங்கரையில் சமாதி செய்விக்கப் பெற்றார்கள். இங்கு சமாதிக் கோயில் எழுப்பப் பெற்று நித்திய பூஜையும் குரு பூஜையும் நடந்து வருகிறது.

மிகச் சிலருக்கே தெரிந்த, நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்த இரண்டு பெண் துறவிகளைப் பற்றிய செய்திகள் இங்கு விவரிக்கப்பட்டுள்ளன. குடத்திலிட்ட விளக்காக விளங்குகின்ற நகரத்தார் இனத்துப் பெண்களைப் பற்றி வெளி உலகத்துக்குச் சொல்ல வேண்டும் என்ற ஆசையின் விளைவே இக் கட்டுரை.

### பஞ்சபூதத் தலங்கள்

1. திரு ஆரூர் (அ) காஞ்சி (மண்)
2. திரு ஆனைக்கா (நீர்)
3. திரு வண்ணாமலை (தீ)
4. திருக்காளத்தி (காற்று)
5. திருத்தில்லை (வான்)

### பஞ்ச சபைகள்

1. திருவாலங்காடு – இரத்தின சபை
2. சிதம்பரம் – பொற்சபை
3. மதுரை – வெள்ளியம்பலம்
4. திருக்காளத்தி – தாமிரசபை
5. திருக்குற்றாலம் – சித்திரசபை

# மறுமையிலும் உன்னை நினைக்க வரம் வேண்டும் இறைவா

முனைவர் மெ. மெய்யப்பன்

(இணைப்பேராசிரியர், இயற்பியல் துறை,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி – 630 003)

உயிரினங்களுக்கு மறுபிறப்புண்டா? என்ற கேள்வியைச் சிந்தனையின் கருவாக்கி, இலக்கியக் கருத்துக்களின் ஆதாரத்துடன் அறிவியல் பார்வையில் மெய்ப்பொருளை எட்ட முயலுகின்றது இக்கட்டுரை

### மறுபிறப்பு பற்றி பகவத்கீதை

மனிதர்களுக்கு மறு பிறப்புண்டு என்ற கருத்தை அழிவில்லாத ஆத்மாவைக் கொண்டும், முக்தி பெற அயராது முயல்வதற்கான வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டிருக்கின்றது என்ற நம்பிக்கையைப் பெறுவதற்ககாக வரையறுக்கப்பட்ட உயிரின் தத்துவத்தைக் கொண்டும் பகவத் கீதை நிறுவுகின்றது.

ஸாங்கிய யோகத்தின் 22 வது சுலோகம் இதைத் தெளிவாகத் தெரிவிக்கக் கூடியதாக இருக்கின்றது. உயிரின் அழிவின்மைக் கோட்பாட்டின் விரிவாக்கமே மறு பிறப்பு என்பதை இதிலிருந்து அறிய முடிகின்றது

“வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய நவானி க்ருஹ்னாதி நரோ அபராணி ததா சரீராணி விஹாய ஜீர்ணான் யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ”

(ஸாங்கிய யோகம், சுலோகம் 22)

ஞான கர்ம சன்யாசி யோகத்தில் (சுலோகம் 5) கண்ணன், தனக்கும், தன் தோழன் அர்ச்சுனனுக்கும் பல பிறப்புக்கள் கழிந்து போயின என்று கூறி மறுபிறப்பை உறுதிப்படுத்துகின்றான். ‘சென்ற பிறப்பில் தான் ஒருவனுக்குக் கூறிய அறிவுரையே வழிவழியாகப் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. அது நலிவடைந்து போனதால், அதை நான் உனக்கு மீண்டும் சொல்கின்றேன்’ என்கிறார்.

இதை நுணுகி ஆராய்ந்தால், காக்கப்பட வேண்டிய சமுதாயக் கட்டுப்பாடுகள், மற்றும் ஒழுக்க நெறிமுறைகள் இவற்றை வலி யுறுத்துவதற்காகவே மறுபிறப்பு என்ற உத்தியைக் கண்ணன் கையாண்டிருப்பது புலப்படும்.

மறுபிறப்பைச் சான்றோர்கள் கற்பித்ததிற்கு ஏதாவது ஓர் அடிப் படைக் காரணம் இருக்க வேண் டும். இல்லாவிட்டால் வெறும் வாதங்கள், பிரதி வாதங்கள் மூலம் பெறப்பட்ட முடிவுகளை இறுதியாக்கி மக்களுக்குப் புகட் டத் துணிவு பெற்றிருக்க மாட்டார் கள்.

உண்மைதான். மறுபிறப்பைச் சான்றோர்கள் கற்பித்ததிற்குக் காரணம், சமுதாயத்தின் பொது நலத்தில் ஒவ்வொரு தனி மனித னும் கடமை உணர்வோடு பங்கு பெற வேண்டும் என்பதில் அவர் கள் கொண்ட நியாயமான பெரு விருப்பமே ஆகும்.

மறுபிறப்பு பற்றிய பகவத்கீதை யின் கருத்தை நிலையாமை அதி காரத்தில் வரும் 8 வது குறளில் திருவள்ளுவர் கூறி இருக்கின் றார். மறு பிறப்பைத் திருவள்ளுவர் மறுக்கவில்லை என்பதற்கு அவர் அச் சொல்லைத் தம் குறள்பாக் கள் பலவற்றில் கையாண்டிருப் பதைக் கொண்டு நிறுவலாம்.

ஒரு பிறப்பில் ஆமைபோல் ஐம் பொறிகளையும் அடக்கியாள வல்லவனானால், அஃது அவனுக் குப் பல பிறப்பிலும் காப்பாகும் சிறப்புடையது என்ற கருத்தைக் கூறும்

*"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்*

*எழுமையும் ஏமாப் புடைத்து"*

*(ஆக்கமுடைமை, 126)*

என்ற குறளும், ஒரு பிறப்பில் தான் கற்ற கல்வியானது, அப்பிறப் பிற்கு மட்டும் அல்லாமல், ஒருவ னுக்கு ஏழு பிறப்பிலும் நன்மை அளிக்கும் என்ற கருத்தைக் கூறும்,

*"ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவர்க்கு*

*எழுமையும் ஏமாப் புடைத்து"*

*(கல்வி, 398)*

என்ற குறளும், சான்றோர்கள் புகழ்ந்து சொல்லிய செயல்களைப் போற்றிச் செய்ய வேண்டும், அவ் வாறு செய்யாமல் மறந்து போ னால், அவர்க்கு ஏழு பிறப்பிலும் நன்மையில்லை என்ற கருத்தைக்

கூறும்

*"புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும் செய்யாது*

*இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்"*

*(பொச்சாவாமை, 538)*

என்ற குறளும், ஏழு பிறப்பிலும் தான் புகுந்து அழுந்துவதற்குரிய நரகத் துன்பத்தை பேதை தன் ஒரு பிறவியிலேயே செய்து கொள் வான் என்ற கருத்தைக் கூறும்,

*"ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்*

*தான்புக் கழுந்தும் அளறு"*

*(பேதைமை, 835)*

என்ற குறளும், மறுபிறப்பில் திருவள்ளுவர் கொண்ட கருத்திற் குச் சான்றாகத் திகழ்கின்றன.

மறுமை பற்றி மேலும் பல குறள் கள் கருத்துத் தெரிவிக்கின்றன. இக்குறள்கள் எல்லாம் மனித னுக்கு மொத்தம் ஏழு பிறப்பிருப் பதாகச் சித்தரிக்கின்றன. கணக் கற்ற பிறப்புகளுண்டு என்ற பகவத் கீதையின் கோட்பாட்டிலி ருந்து இது சிறிது மாறுபட்டிருக் கின்றது, என்றாலும் இரண்டிற்கும் அடிப்படை ஒன்று தான்.

மறுபிறப்புண்டா ? அறிவியல் நோக்கில் இக் கேள்வியை அணு கினால் குழப்பத்திற்கு மாறாக ஒரு தெளிவு பிறக்கின்றது.

பேரண்டத்தில் 92 வகையான அணுக்களே உண்டு. அணுக்கள் எல்லாம் உயிரற்றவை தான். ஆனால் அவை ஒன்றை ஒன்றை உணரக்கூடிய தனித் திறமை யைப் பெற்றிருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட அணு, ஒரு குறிப்பிட்ட அணுவோடு இணைவதும், ஒரு குறிப்பிட்ட அணுவை விலக்குவ தும் இதனால்தான். அணுக்கள் இணைப்பில் மூலக்கூறுகள், மூலக்கூறுகள் உடலில் உருவாக் கப்பட்டால் அவை உயிரியல் மூலக்கூறுகளாகின்றன. இவற் றின் உணர்வுத் திறன் தனி அணுக்களை விட பல மடங்கு அதிகம். இவற்றின் இயக்கமே உடலுக்கு உயிரூட்டுகின்றது. உயிர் பிரிதல் என்பது இம் மூலக் கூறுகளின் ஒருங்கிணைந்த தொடர் இயக்கம் தடைப்பட்டது என்பதுதான். உயிரற்ற உடம்பில் உயிரியல் மூலக்கூறுகள், சாதா ரண மூலக்கூறுகளாகி விடு கின்றன. இம் மூலக்கூறுகள் நிலத்தில் சேர்ந்து, விளை பொரு ளில் படிந்து, மீண்டும் மனித உடலை அடைந்து மீண்டும் உயிரி யல் மூலக்கூறுகளாக உருமாற

லாம். அணுக்களுக்கு அழிவில்லை என்பதால் இது ஒரு வட்டச் சுற்று முறையில் தொடர்ந்து கொண்டேதானிருக்கும். ஆனால் முற்பிறப்பில் பெற்ற அதே எண்ணங்கள் இப்பிறப்பிலும் நினைவிற்கு வருமா!

அறநெறி வழுவாமையை மனிதர்கள் தங்கள் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் கடைப்பிடிக்க வேண்டும் என்று விரும்பிய சான்றோர்கள் அவர்களுக்கு அறிவுரைகளோடு உள்ளார்ந்த அச்சமும் தேவை என நம்பினார்கள். தீய செயல்களைச் செய்ய அஞ்சுக என்றே திருவள்ளுவர் கூறுகின்றார்.

*தீயவை தீய பயத்தலால் தீயவை*

*தீயினும் அஞ்சப்படும்*

*(தீவினையச்சம், 202)*

அப்படி அஞ்சாது தீய செயல்களைச் செய்தால், அச்செயல்களே மனிதர்களை அழிக்கும் பகையாகும், என்று திருவள்ளுவர் முன்னறிவிக்கின்றார்.

*"குற்றமே காக்க பொருளாகக் குற்றமே*
*அற்றம் தரூஉம் பகை"*

*(குற்றங்கடிதல், 434)*

அறிவுரைகள் பலன் தரும் என்றாலும் அது எல்லாச் சூழ்நிலைகளிலும் ஒரே மாதிரியாக அனுகூலமாக இருக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. சில சமயங்களில் அச்சம். அறிவுரைகளை விட அதிகம் பயன் தரத்தக்கதாய் இருக்கின்றது

*"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்"*

*(அறிவுடைமை, 428)*

அஞ்சதி தக்கதைக் கண்டு அஞ்சாதிருப்பது எப்படி அறியாமையாகுமோ, அதைப் போல அஞ்சத்தக்கதைக் கண்டு அஞ்சுவதே அறிவுடையார்க்கு அழகு என்பது வள்ளுவன் வாக்கு.

அவசியத்தின் காரணமாக இருந்தாலும், எது அடிக்கடி பயன்படுத்தப்படுகின்றதோ அது விரைவில் தன் மதிப்பை இழந்து விடும் நிலையைப் பெறும். அறிவுரைகளின் நிலைமை இன்றைக்கு இப்படித்தான் இருக்கின்றது. எல்லோரும் பிறர்க்கு அறிவுரை கூறுபவர்களாக இருக்கின்றார்களே ஒழிய, அவ்வறிவுரைகளைத் தாமே பின்பற்றுபவர்களாக இல்லை. இன்றைக்கு எளிதாக

வும், இலவசமாகவும் எப்பொழுதும் கிடைக்கக் கூடியாதாக இருப்பது பெரும் மதிப்புள்ளது என்று கருதப்படும் அறிவுரைகள் தாம். இன்றைக்கும் இந்த அறிவுரைகள் எல்லோர்க்கும் கிடைத்துக் கொண்டு தானிருக்கின்றது, என்றாலும் சமுதாய வாழ்க்கைச் சிறப்பெய்தியதாகத் தெரிய வில்லை. அறிவுரைகளோடு உள்ளார்ந்த அச்சமும் இணை யாமல் போனதால் இந்நிலை உருவாகி வருகின்றது.

அஞ்சுவதற்கு அஞ்சாமல் ஒவ் வொருவரும் தங்கள் விருப்பம் போலச் செயல்களாற்றி வருவ தால், ஆன்மீக உணர்வுகள் மக்க ளிடையே மங்கி வருகின்றன; அருளுடைமை நசிந்து கொண் டிருக்கின்றது; பண்புடைமை சீர் குலைந்து போய்க் கொண்டிருக் கின்றது. ஒவ்வொருவரும் மற்றவர் களுக்குத் தெரியாமல் அறநெறி மீறிச் செல்வதை தங்கள் விரை வான முன்னேற்றத்திற்கு உகந்த வழி என நம்பத் தொடங்கி இருக் கின்றார்கள். இந்நிலை இன் றைக்கு முற்றிக் கொண்டே வரு கின்றது. எந்த உலகத்தை ஏமாற்ற நினைக்கின்றார்களோ, அதில் அவர்களும் அடக்கம் என்பதை மறந்தவர்களாகச் செயல்படுகின் றார்கள். பாதிப்பு முன் பின்னே ஆனாலும், தங்களுக்கும் அப்பா திப்பு உண்டு என்பதை அறியாத வர்களாக இருக்கின்றார்கள். இவர்களுடைய அறநெறி மீறிய செயல்களால், மனித நேயம் தேய்ந்து கொண்டே வருகின்றது; ஒவ்வொரு மனிதரும் பிறரிடமி ருந்து விலகிக் கொண்டே செல் கின்றார்கள். இப்படி வள்ரும் இணக்க மற்ற சூழ்நிலையில் மக் கள் ஒற்றுமையாய் வாழ்வதெங் ஙனம்?

இப்படி ஏற்படக்கூடும் என்று எதிர்பார்த்து, சமுதாயச் சிக்க லுக்கு ஒரு தீர்வாக அன்றைக்கே ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு கருத்துதான் மறு பிறவி. ஊழ் வினை உறுத்தூட்டும் என்ற அச்சத்தாலும், மறுமையிலும் குறைவில்லாச் செல்வங்களைப் பெற்று மகிழ்ச்சியோடு வாழ வேண்டும் என்ற ஏக்கத்தாலும், இம்மையில் அறநெறிகளை இயற் கையான கட்டுப்பாட்டினால் கடைப்பிடிக்க முயலுவார்கள் என்று சான்றோர்கள் ஒரு சேரக் கருதியதால், அவர்களுடைய சிந் தனையில் பிறந்த ஒன்றே மறு பிறப்பு எனலாம்.

## "இலங்குடி அய்யன் இருதாள் பணிவோம்"

பொற்கிழிக்கவிஞர்
கா. நாகப்பன் , எம்.ஏ.பி.எட்
காரைக்குடி

வேளாரு பூசையில் கோளாறு நீங்குமே
வெற்றியை நாட்டி நிற்க,
மூளாது மூளாது முன்வினை மூளாது
முனைப்பான நெஞ்சி லுள்ள
பாலாறு போலன்பால் அபிஷேகம் கொள்கின்ற
பகற்சால மூர்த்தி நீயே!
ஆலாகித் தழைக்கவே அடியார்கள் வாழவே
அற்புதக் கீர்த்தி யருளே!
இலங்குடிக் காளியும் அகிற்புகைக் கருப்பரும்
எழுச்சியாய் வந்து காக்க;
நலங்களை நல்கிடும் நங்கையர் பூரணை
புஷ்கலை நம்மை யாளும்
இலங்குடி அய்யனின் இருபுறமும் இருந்துதான்
எந்நாளும் அருளை நல்க,
நலங்குடி யாகுமே நம்குடி என்பதால்
நல்லடி போற்று வோமே!

## தேங்காய் உடைப்பதன் பொருள்

தேங்காய் உடைப்பதன் தத்துவத்தைத் தெரிந்து கொள்வது பொருத்த மானது. தேங்காயின் புற ஓடு மாயை. வெண்ணிறப் பகுதி இறைவன். இளநீர் இறைவனின் அமுத மயமான கருணை. மாயையை அகற்றி உயிர் இறையருளை நுகரச் செய்யும் செயலைக் காட்டுவதே தேங்காய் உடைப்பதன் பொருள்.

# செல்வத்துப் பயன் ....

## அய்க்கண்

பொருளாகிய செல்வம் ஒரு கருவி. 'செய்க பொருளை' என்று கட்டளையிடுகிறார் வள்ளுவர்.

அந்தக் கருவியாகிய செல்வத்தை வைத்து, நாம் பல நல்ல செயல்களைச் செய்ய வேண்டும். அப்படியின்றி, செல்வத்தையே முடிவாக எண்ணி, அதை ஈட்டு வதிலேயே குறியாக வாழக் கூடாது.

பேனா, எழுதுவதற்கு உதவும் ஒரு கருவி. பேனாவே எழுத்தாகி விடாது. அதைப் போல் செல் வம் என்பது, வாழ்வதற்கு ஒரு கருவி. செல்வமே வாழ்க்கை யாகிவிடாது.

பலர் செல்வம் திரட்டுவதையே லட்சியமாகக் கொண்டு, சம்பா தித்துக் கொண்டேயிருக்கிறார் கள்.

செல்வம் பெற்றவன், எல்லாவற் றையும் தானே அனுபவித்துத் தீர்க்க முடியாது.

ஒரு பணக்காரர், என்னிடம் வருத்தத்தோடு சொன்னார்.

“எனக்குப் பசி இருந்தபோது, பணம் இல்லை. இப்போது பணம் இருக்கிறபோது பசி இல்லை”என்றார்.

பணக்காரரிடம் பணம் சேரச் சேர, பணக்கார நோய்களும் வந்து சேர்ந்துவிடுகின்றன.

நீரிழிவு நோய் - இனிப்புப் பொருள்கள் தின்ன முடியாது!

கொழுப்பு நோய் - நெய்ப் பண்டங்கள் உண்ணமுடியாது!

இரத்த அழுத்தம் - சத்தான உணவுகள் சாப்பிட முடியாது!

அன்றாடம் காய்ச்சிகள் போல், கேழ்வரகுக் கஞ்சி, சோளக் கூழ்... முதலான ஏழைகளின் உணவுகள் தான்? பணக்காரர்களுக்கு..

என்னுடைய நண்பர் ஒருவர் பெரும் பணக்காரர். இலக்கிய வாதிகளை அழைத்து ஒரு நாள் விருந்து கொடுத்தார்.

அருமையான அறுசுவை விருந்து

கிச்சடிச் சம்பா சோறு...

மணக்க மணக்க வியஞ்சனங் கள்...

சாம்பார், ரசம், தயிர், வடை,

அப்பளம், பழப்பாயாசம், ஐஸ் கிரிம்....

எங்களைச் சாப்பிடச் சொல்லி அவர் பார்த்துக் கொண்டிருந்தார்.

"ஏன், நீங்களும் சாப்பிடுங்க ளேன்?" என்று சொன்னேன் நான். "நீங்கள் சாப்பிடுங்கள்... நான் பிறகு சாப்பிடுகிறேன்" என்று சொல்லிவிட்டார் அவர்.

நாங்கள் வயிறு முட்டச் சாப் பிட்டு ஏப்பம் விட்ட பிறகு, "அய்யா! நீங்கள் சாப்பிடுங்கள்.." என்றோம்.

"சாப்பாடா? எனக்குச் சாப்பாடு இது தான்!" என்று அவர், அல மாரியைத் திறந்து மாத்திரை களை எடுத்தார்.

கை நிறைய மாத்திரைகள் - வண்ண வண்ண மாத்திரைகள்

அவைதான் அவருக்குச் சாப்பாடு!..

வீடு நிறையச் செல்வம் இருந் தாலும், வயிறு நிறையச் சாப்பிட முடியாது அவரால்...

இதைத் தான் சங்கச் சான்றோன் நக்கீரன்

'துய்ப்பேம் எனினே தப்புந
பலவே;
செல்வத்துப் பயனே ஈதல்'

என்றான்.

'தாளாற்றித் தந்த பொருள்
எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற்
பொருட்டு'

என்று வழிகாட்டுகிறார் வள்ளு வர்.

'உழைத்துச் சம்பாதித்த பணத் தைப் பிறருக்கு உதவியாகக் கொடுங்கள்' என்று அறிவுரை கூறுகிறார் வள்ளுவப் பெருமான்.

நம் உடல் அழிந்த பிறகு, உயி ரோடு கூட வருவது எது?

நாம் சம்பாதித்த பணம், சொத்து, பொருள் ஏதாவது நம்முடன் வருமா?

வராது. பின், எது நம்மோடு கூட வரும்?

நாம் செய்த பாவபுண்ணியம் தான், உயிரோடு கூட வரும்...

உயிருக்குத் துணையாக வரும் புண்ணியத்தை, செல்வத்தால் பெறலாம்.

உடலுக்குப் பயன்படாத செல் வத்தை உயிருக்குப் பயன்படச் செய்யலாம்...

மற்றவர்க்குப் பயன்படுகின்ற செல்வம் உடையவர்களைப் பல வாறு பாராட்டுகிறார் வள்ளுவர்.

இல்லாதார்க்கு உதவும் பணக் காரரை, 'நீர் நிறைந்த ஊருணி'

என்று போற்றுகின்றார். 'ஊரின் நடுவே பழுத்துப் பயன்படும் பழமரம்' என்று பாராட்டுகின்றார். 'இலை, பூ, காய், பழம், பட்டை, வேர் முதலாகிய எல்லா உறுப்புகளும் பயன்படும் மருந்து மரம்' என்று புகழ்கிறார்.

யாருக்கும் பயன்படாமல், எந்த நல்ல காரியத்துக்கும் கொடுக்காமல், எந்த தான தர்மமும் செய்யாமல், கஞ்சனாகப் பணம் சேர்த்து வைத்திருப்பவனைக் கடுமையாகச் சாடுகிறார் வள்ளுவர்.

பணம் சேர்ப்பதையே குறிக்கோளாகக் கொண்டு, தான தர்மம் எதுவும் செய்யாதவன், பூமிக்குப் பாரம் என்று கடிகிறார். செல்வத்தைப் பிடித்துள்ள ஒரு நோய் என்று இழித்துரைக்கிறார். ஊர் நடுவே இருந்து தீங்கு செய்யும் நச்சுமரம் என்று எச்சரிக்கிறார். 'செத்தானுக்குச் சமம்' என்று திட்டிவிட்டு, 'செத்த பிறகும், அவன் அடுத்த பிறப்பு பேய்ப் பிறப்பாகவே இருக்கும்' என்று சாபம் இடுகிறார்.

'பொருளால் ஆம் எல்லாம்
என்று ஈயாது இவறும்
மருளால் ஆம் மாணாப் பிறப்பு'

என்று அவர் உறுதியாகக் தெரியப்படுத்துகிறார்.

செல்வம் என்னும் வலுவான கருவியைப் பெற்றவர்கள், அதனை வைத்து உயிர்க்கு நன்மை பயக்கும் செய்லகளைச் செய்ய வேண்டும் என்று வலியுறுத்துகிறார் வள்ளுவர்.

தந்தை பெரியார் அவர்கள், வள்ளல் அழகப்பாவின் நினைவு நாள் அன்று, பேசிய கருத்து ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

வள்ளல் அழகப்பர், காரைக்குடியைக் கல்வி நகரமாக்கிய சாதனையாளர். அங்கே ஒரு பல்கலைக் கழகம் அமைவதற்கான வளர்ச்சியைத் தனிமனிதராக நின்று ஏற்படுத்திய கொடைச் செயல்வீரர். தான் சம்பாதித்ததையெல்லாம் கல்விக்காக அள்ளிக் கொடுத்த அண்ணல். கொடுப்பதற்காகவே சம்பாதித்த வண்மை வணிகர். கோடி கொடுத்த கொடைஞர். குடியிருந்த வீடும் கொடுத்த கொடை வள்ளல். செல்வம் அனைத்தையும் கல்விக்காகச் செலவிட்ட கல்வித் தந்தை.

அவரைப் பற்றிப் பெரியார் அருமையாகச் சொன்னார்.

இந்த வட்டாரத்திலுள்ள பணக்காரர்களில் அழகப்பாதான் கெட்டிக்காரர். மற்றவர்ளெல்லாம் பணம் சம்பாதித்து, முழுவதை

யும் தாம் அனுபவிக்காமல், தன் குழந்தை குட்டிகளுக்கு விட்டு விட்டுப் போனார்கள். அழகப்பா தான், சம்பாதித்த பணத்தையெல் லாம் தனக்காகப் பயன்படுத்திக் கொண்டவர். நிலையற்ற செல் வத்தை வைத்து, நிலையான புக ழைத் தேடிக் கொண்ட கெட்டிக் காரர். மற்ற செல்வந்தர்களெல் லாம், வைத்திழக்கும் வன்கண வர்" என்னும் பொருள்பட அழகப்ப வள்ளலைப் புகழ்ந்து பேசினார்.

'கொடையால் வரும் வறு மையை, நாம் விற்றுக் கொள்ளத் தகும்' என்று வள்ளுவர் அறிவு றுத்துவார். கொடையளித்த தனால் வரும் வறுமை 'ஒப்புரவி னால் வரும் கேடு', உண்மையில் கேடே அல்ல. அது ஒரு வகை யில் 'வளம்' - அழியாத வளம். அதைத்தான் 'நத்தம் போல் கேடு' என்கிறார் வள்ளுவர்.

செல்வமெல்லாம் இழந்து காட் டில் இருந்த குமணன், அவன் தம்பியை விட, புகழுடைய வனாக வரலாற்றில் வாழ்கிறான். அவனுடைய அரசச் செல்வம் அழிந்து போனாலும், புகழ்ச் செல்வம் அவனை வந்தடைந் தது.

வாமனனுடைய ஒரே அடியால் தன் ராஜ்யத்தை இழந்தாலும், மாபலிச் சக்கரவர்த்தி, தன் வாக்கை மாற்றிக் கொள்ள வில்லை. தன் தலையையே கொடுத்து, நிலைத்த புகழ்ச் சாம்ராஜ்யத்தை அடைகிறான்...

கொடுப்பதற்கு ஒரு பொருளும் இல்லாத போர்க்களத்தில், உயிர் போகும் சமயத்தில் - உயிர்க்குத் துணையாக வரக் கூடிய புண்ணி யத்தையே தானம் கொடுக்கிறான் கர்ணன்.

அந்தக் கொடைவள்ளலிடம், இறைவனே பிச்சைக் காரனாய் கை ஏந்தி நிற்கிறான். தர்மத்தைத் தாரை வார்க்க அங்கே தண்ணீர் இல்லாததால், தன் உடம்பிலி ருந்து வழியும் செந்நீராலே தாரை வார்க்கிறான் கர்ணன்.

அந்த வள்ளலின் ரத்தம், தன் கையில்பட்டதும், கண்ணனும் வள்ளலாகிறான்.

"கர்ணா! உனக்கு என்ன வேண் டும், கேள்!"என்கிறான் கண்ணன்.

"அடுத்து வரும் பிறவிகளிலும், இல்லை என்று வருபவர்க்கு, இல்லையென்று உரைக்காத இத யம் எனக்குக் கொடு.." என்று கேட்கிறான் கர்ணன்.

கொடுப்பதற்கு, வேண்டியது பொருள் இல்லை. இதயம்தான் வேண்டும்.

கொடுக்க நினைக்கிற இதயம் இருந்துவிட்டால், பொருள் இல்லாவிட்டால் என்ன?

குமணன்போல், தலையைக் கொடுக்கலாம். மாபலிபோல் உயிரைக் கொடுக்கலாம். கர்ணன் போல், புண்ணியத்தைக் கொடுக்கலாம்...

பலரிடம், கொடுப்பதற்குப் போதுமான பணம் இருக்கும். ஆனால் கொடுப்பதற்கு வேண்டிய மனம் இருக்காது.

அந்தக் கொடுக்கும் மனம், அறிவுள்ளவர்களிடம் தான் இருக்கும். 'வித்தகர்களிடம் தான் இருக்கும்' என்கிறார் வள்ளுவர்.

சாவு என்பது, பிறந்தவர்களுக்கெல்லாம் உண்டு. உலகத்தில் தினமும் எத்தனையோ ஈ, எறும்பு உயிரினங்கள் சாகின்றன. அப்படிச் சாவதற்கு மனிதன் பிறக்கவில்லை.

மனிதன் பிறக்கும்போது அழுகிறான். மற்றவர்கள் சிரிக்கிறார்கள்.

அந்த மனிதன் இறக்கும்போது சிரித்துக்கொண்டே இறக்க வேண்டும். மற்றவர்கள் அழ வேண்டும்.

அப்படி இறக்கின்ற மனிதன், சாவதில்லை. நிரந்தரமாக வாழ்கின்றான்.

உயர்ந்த லட்சியங்களுக்காக, மற்றவர்கள் நலத்திற்காகச் சாகிறவர்கள், பிணமாகி அழிவதில்லை. மணமாக வரலாற்றில் வாழ்கிறார்கள்.

அவர்களுடைய சாவு, இலதாகும் சாக்காடு அல்ல. 'உளதாகும் சாக்காடு' என்கிறார் வள்ளுவர்.

வீரன் பகத் சிங், கொடி காத்த குமரன், வீரபாண்டிய கட்டபொம்மன், மருதுபாண்டியர்கள், மகாத்மா காந்தி முதலிய தியாகிகளின் சாக்காடு, மறைகின்ற சாக்காடு அல்ல. 'உளதாகும் சாக்காடு' அல்லவா?

தனக்கென்று வாழ்பவர்கள் பெயர், வாக்காளர் பட்டியலில் தான் இருக்கும். சமுதாயத்திற்கென்று வாழ்பவர்கள் பெயர். வரலாற்று ஏட்டில் நிலைத்திருக்கும். அவர்களை மரணம்கூட, சாகடிக்க முடியாது.

இத்தகைய மரணமில்லாப் பெருவாழ்வு, வித்தகர்க்குத்தான் கிடைக்கும். இதையே வள்ளுவர்.

**'நத்தம் போல் கேடும், உளதாகும்**
**சாக்காடும்**
**வித்தகர்க்கல்லால் அரிது'**

என்று தெளிவுறுத்துகிறார்.

# நவகோள் வணக்கம்

### ஞாயிறு

ஓராழித் தேரில் உலகை வலம்வந்து
பாராளும் செய்ய பரிதியே - நீராழி
சூழ்புவியில் நின்னடிச் சோதி வணங்குவார்
வாழ்வழியைக் காட்டநீ வா.

### திங்கள்

சிவனார் திருமுடியைச் சேர்ந்த மதியே
தவம்பெற்ற திங்கள் தலைவா - உவகையால்
வெண்பரித் தேரில் விளங்குமோர் வித்தகா
கண்போல எம்மையே கா.

### செவ்வாய்

பூமி புதல்வாநற் பூவையர் போற்றுமோர்
சாமியே ஆண்மைகொள் சக்தியே - சேமமாய்
மங்கலம் ஈயும் மகிழ்நனே செவ்வாய்
பொங்குமலர்ப் பாதமே புகல்

### புதன்

தாரையின் சேயே தனித்ததோர் கன்னியைச்
சேருநற் காளையே செல்வாவுன் - சீரடி
போற்றிப் பணிந்தோம் புதனே எம் இன்னல்கள்
மாற்றியே காக்க மகிழ்ந்து

### குரு

தேவர் வணங்குமோர் தேவனே சீர்சால்
பாவையாம் தாரை பணியும் - ஆவியே
எங்கள் குருவே எழில்வாக் கருளியே
எங்களைநீ காப்பாய் இனி

### சுக்கிரன்

பல்கலை கற்றதோர் பார்க்கவா வெள்ளியே
வல்ல அசுரரை வாழ்த்துவோய் - நல்ல
வயிரம் விரும்பிய வள்ளலே உன்றன்
தயவெமக்கு வேண்டுமே தா

## சனி

காகத் தமரும் கரியவா நீலமே
ஆகத் தணியும் அழகனே - வேகமாய்ப்
பற்றிப் பிடித்துப் படுத்தியே காப்பவா
உற்றவனாய் வந்திங் குதவு

## ராகு

கரியதோர் நாகமாய்க் காணும் இராகு
அரசு தருகின்ற அன்பா - சிரங்கெட்டுப்
பெற்றவா உன்புகழ் பேசுவோர்க் கருளுமோர்
நற்றவா போற்றினோம் நாம்

## கேது

செய்யதோர் பாம்பாய்ச் சிறந்த வடிவுடை
அய்யனே ஞானம் அளிப்பவா - மெய்யனே
கேடுகள் நீக்குமோர் கேதுவே உன்னை
நாடினோம் போற்றி நயந்து

காப்பியக் கவிஞர் நா. மீனவன்

### அம்பிகையின் ஆட்சித் தலங்கள்

1. காஞ்சி – காமாட்சி
2. மதுரை – மீனாட்சி
3. காசி – விசாலாட்சி
4. நாகை – நீலாயதாட்சி

### அழகிற் சிறந்தவை

1. தேரழகு – திருவாரூர்
2. தெருவழகு – திருவிடைமருதூர்
3. மதிலழகு – திருவிரிஞ்சை
4. விளக்கழகு – திருமறைக்காடு

### அஷ்ட பந்தன மருந்துகள்

1. கொம்பரக்கு
2. கருங்குங்கிலியம்
3. சுக்கான்
4. காவிக்கல்
5. வெண்மெழுகு
6. செம்பஞ்சு
7. வெண்ணெய்
8. உலர்ந்த லிங்கம்

இலங்குடி

# *பகச்சால மூர்த்தி ஐயனுர் பதிகம்



## காப்பு

எங்கும் சிறந்த இலங்குடிமா நன்னகரில்
மங்களம்சேர் பாலே மரத்(து)உதித்த [1]துங்கப்
பகச்சால மூர்த்தியின்மேல் பாடுதலுக்(கு) ஐங்கை
[2]இவத்தாள் அருளும் இனிது.

## நூல்

சீர்நிறைந்(து) இலகிஅருள் ஓங்கும்ப்ர காசமாய்ச்
சின்மயா னந்த வடிவாய்த்
தேடுதற்(கு) அரிதான கடவுள்திரு வருள்அதிக
சிவதவம் தன்னில் உயர்வாய்க்
கூர்நிறைந்(து) இலகுபற் பத்மமா ரிஷிவரும்
கோலமது கண்டு சிவனுர்
கொள்கைஇது மோசமென்(று) ஓடி[3]ஐ விரலிஉட்
கொள்மறை(வு) அறிந்து மாயோன்
[4]வார்நிறைந்(து) இடுமணிக் கொங்கை வாசனேஅழகு
மட்(டு) இலா மோகவடிவாய்
வந்(து)அவ தரித்துநிற் பதுகண்டு சிவபிரான்
வளர்நாத மேகலித்துப்
பார்தன்னி லேவிழும் முன்னமே [5]சீதரன்
பகர்கரம(து) ஏந்த வந்து
பண்பான [6]பணேசூழ் இலங்குடி நகரில்வளர்
பகச்சால மூர்த்தி அருளே க

---

*இந்நூலாசிரியர் பெயர் தெரியவில்லே

1 துங்கம் - பெருமை வாய்ந்த 2 இவத்தாள் - யானேயின்திருவடி
3 ஐவிரலி - ஐவிரலிக் கொடி 4 வார் - கச்சு 5 சீதரன் - திருமால்
6 பணே - வயல்

திருவான நாலுமறை ஆதியாய்ப் பலசீவ
 செந்துக் களுக்கும் முதலாய்த்
தேவர்தம் தலைவனாய் அரும்பிணி அகற்றிடும்
 சித்தான மூல வடிவாய்க

குருவாய் எவர்கரும்அனு போகமாய் நீதியாய்க்
 [7]கொண்டல்போல் கருணை புரியும்
[8]கோதுஅற்ற மெய்ப்பொருள் செல்வமாய் நின்றுஇலகு
 குலதெய்வ மேஎ வர்கரும்

மருமவினை ஆனதுன் பக்கடல் அகற்றிடும்
 வரதனே! சரத நிமலா
வானவர்க்(கு) இனியஅமு(து) என்னவே எட்டாத
 மௌனமே அன்பர் திருவே!

பரமதக் கரிதனில் எழுந்து அருளு கின்றசிவ
 பாக்யமே! மணிகள் நிறையும்
பண்பான பணைசூழ் இலங்குடி நகரில்வளர்
 பகச்சால மூர்த்தி அருளே உ

ஆதரவு பெருகுபர மானந்த மெய்யனே
 அரிகரன் பெற்ற அமுதே!
அற்புதத் திருவருள் நிறைந்தவா செகதீச
 ஆண்டவா! அன்பர் மனதில்

காதலுடன் அனுதினம் வளர்ந்திடும் துய்யனே!
 கருணை கடாட்ச ரசமே!
காண்பதற்(கு) அரிதான மெய்ஞான தெய்வமே!
 கலித விர்த்திடு மோனமே!

தீதுஅகல் செல்வமொடு [9]கீர்த்திமென் மேலதாய்த்
 தித்திக்கும் இன்ப வசனம்
செய்தரும சிந்தைகளும் அல்லாமல் வேருன
 தீங்குஒன்றும் அணுகி டாதுன்

பாதமலர் வழிபடும் பத்திதந்(து) ஐயனே!
 பாலனைக் காத்(து) அருளுவாய்
பண்பான பணைசூழ் இலங்குடி நகரில்வளர்
 பகச்சால மூர்த்தி அருளே ௩

---

7 கொண்டல் - மேகம் 8 கோது - குற்றம் 9 கீர்த்தி - புகழ்

[10]துடியான முன்னோடி பாலைஅடி யான்மிகும்
சூரசின் னக்க ருப்பன்
[11]துலங்குமுண் டாசுப்பெ ரியகருப் பண்ணன்வளர்
சொல்மேடை தங்கு காளி
கடிதான நொண்டிக் கருப்பனொடு பேச்சியும்
கனவீர னுன அனுமான்
கல்மனக் காரிராக் காயிமுனி அய்யன்
கணேசனொடு சுப்பிரமணியன்
[12]வடிவான வயிரவன் மேடைக் கருப்பனொடு
மகிழநிதம் அரசு புரியும்
வல்லமை யுடன்இந்த உலகெலாம் புகழ்பெற்ற
மாணிக்க மேஉ யர்ந்த
[13]படிமிசையி லேபெருந் தனவணிகர் குலதெய்வ
பாக்யமே அன்பர் திருவே!
பாலனென வேவந்(து) இலங்குடி நகரில்வளர்
பகச்சால மூர்த்தி அருளே

கங்கைகோ தாவிரி யுடன்கண்ண வேணியும்
கடல்ஏழு சிந்து நதியும்
காரணம தானயமு னாநதி வைகையும்
காவேரி சுருளி நதியும்
தங்கமய மாய்இலகு தில்லையோ(டு) அருணகிரி
தவமேவு காசி மதுரை
சார்ந்தரா மேச்சுரம் திருத்தணி திருப்பதி
தாயுமான சாமி மலையும்
மங்கள மதாகஇத் தலம்அதனில் உளஉயர்
சிவாலயம் எலாம் சுற்றிலும்
மாருமல் அனுதினமும் உன்னுடைய தாள்இணை
வணங்குதற்(கு) இணையாகுமோ
[14]பங்கயம் நிகர்த்தகழல் ஐயனே தனவணிகர்
பாகுவே! இன்ப ரசமே!
பனுவலர்க்(கு) உதவிடும் இலங்குடி நகரில்வளர்
பகச்சால மூர்த்தி அருளே ௫

---

0 துடி - வலிமை 11 துலங்கு - விலங்கு 12 வடிவான - அழகான
13 படி - உலகம் 14 பங்கயம் - தாமரை

தாயர்தம் வயிற்றினில் கருவாகி மிகுதுன்பு
சார்ந்துமுன் னூறு நாளும்
தங்கிஅதி லேநின்று வினையினுற் பூமியில்
தான்வந்து மேசெ னித்து
ஓயுதல் இலாமல்முலை அமுதுஉண்டு மேனியை
ஊட்டப் படுத்தி மேலாய்
உப்புஇனிப் புப்புளிப் புத்துவர்ப் புக்கசப்
புஉறைப்(பு) ஒன்றும் உண்டி அதனை
நேயமுட னேகலந்(து) உண்(டு)என் றன்உடல்தன்னை
நிலையாக வேநி னைத்து
நிட்டூர மாய்அகங் காரமன மேகொண்டு
நிலைகெட்டு நின்ற(து) அல்லால்
பாயநினை யமன்வரும் முன்னரே உன்னுடைய
பாதமலர் துணைபெற் றிலேன்
பண்பான பணைசூழ் இலங்குடி நகரில்வளர்
பகச்சால மூர்த்தி அருளே ௬

பொல்லாத வஞ்சனைகள் சூதுகப டத்தொழில்
பொருமையொடு பேய்அ ருட்டி,
போகின்ற வழியிலே கள்ளர்பயம் விஷபீடை
புகலான மின்னல் இடியும்
வல்லாண்மை ஆனபல மிகுதுட்ட செந்துக்கள்
வண்டமுனி காளி கூளி
மட்டிலாப் பேய்நரிகள் செங்கரடி செம்மந்தி
வலுவான துட்டர் உறவும்
எல்லைக் கருப்புடன் கொள்ளிவாய்ப் பேய்களும்
எவ்வகைப் பட்ட பிணியும்
என்முன் வராமலே துணையெனக்(கு) அருளுவாய்
இட்டகுல தெய்வ மணியே!
பல்ஆயிரம் கோடி அண்டத்(து) உலாவிடும்
பரமசிவன் அருள்பு தல்வனே!
பாண்டிநாட்(டு) எல்லையுள் இலங்குடி நகரில்வளர்
பகச்சால மூர்த்தி யருளே ௭

## ஆசாரிய பாவனை

**ஆசாரியன்** ஆவாஹன காலத்தில் குரு ரூபத்தையும்; நைவேத்திய, தூப, தீப அருச்சனை காலத்தில் மந்திர ரூபத்தையும், அலங்கார காலத்தில் தாய் ரூபத்தையும் ஸ்தோத்திரம், ப்ரதக்ஷிணம் செய்யும் காலத்தில் பக்தனுகவும் ஆகிருர்.

## இலங்குடி

# அருள்மிகு பகற்சால மூர்த்தி ஐயனர் பதிகம்

இயற்றியவர்:

தேவகோட்டை க. முரு. ராம. சோம. இராமனுதன் செட்டியார்.

### காப்பு

துய்ய நலம்பலவும் தோன்றும் இலங்குடிவாழ்
ஐயன் பகற்சால ஐயனர்—[1]செய்யமலர்ப்
பாதமிசைச் சூட்டுதமிழ்ப் பாவிளங்க [2]ஐங்கரன் எற் (கு)
ஆதரவாய் ஈவான் அருள்.

### நூல்

திங்கள்அம் [3]குழவிநதி கொன்றைஅணி [4]பரன்அரசு
செய்தநல் பாண்டி நாட்டின்
[5]திலதம்என உரைசெயப் [6]பண்ணைவாய் முத்தின்ஒளி
திகழ்தலால் மாந்தர் எல்லாம்
[7]கங்குல்பகல் இதுஎன்ன அறியாமல் அயர்கின்ற
காலைஅம் கடிம லர்ப்பூங்
காவில்உறை கிளிபூவை தமிழ்பாடல் கருவியாக்
கங்குல்பகல் [8]ஓர்ந்(து)உ ளத்தில்
[9]சங்கைஇல் லாதுவாழ் காட்சியொடு பலவளம்
சார்ந்து[10]பொன் நகர்இ(து) என்னத்
தரணியோர் கொண்டாட முகில்இன முழங்கல்போல்
சங்குஇனம் முழங்கி ஆர்க்கும்
பங்கய மலர்த்தடம் சூழ்ந்திடும் இலங்குடிப்
பதியில் இனி(து) ஆக வாழும்
பாலைஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 1

---

1 செய்ய-சிவத்த 2 ஐங்கரன்—விநாயகர் 3 குழவி-குழந்தை 4 பரன்-சிவபெருமான் 5 திலதம் - பொட்டு 6 பண்ணை - வயல் 7 கங்குல்-இரவு 8 ஓர்ந்து - ஆராய்ந்து 9 சங்கை - சந்தேகம் 10 பொன்னகர்-அமராவதிநகர்.

விண்அளவு [11]தருமிகும் கானகம் தனில்ஏன
வேட்டையை நாடி ஆகு
மெய்வருத் தம்தணிய உள்நினைந்(து) ஒருவேடன்
[12]விரைமருவு பாலை நீழல்
தண்என இருப்ப ஆங்(கு) உற்றிடும் போழ்தில் அத்
தாருவில் கவலை என்னும்
தனிக்கொடி செழித்துப் படர்ந்திடக் கண்(டு)அதில்
சார்கிழங்(கு) உண்ண எண்ணித்
துண்என எழுந்துவன் பாரைகொடு[13] கல்ல ஓர்
[14]தொனிஅதில் கேட்க அஞ்சிச்
சோதிக்கும் வேளைஅம் பாலையடி தோன்றிஇத்
[15]தொல்உல(கு) உளோரும் விண்ணில்
[16]பண்ணவரும் வந்துதொழ வளமமிகு இலங்குடிப்
பதியில் இனி(து) ஆக வாழும்
பாலைஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 2

[17]இச்சைஉற்(று) உலகுஉய்ய வெளிவந்த ஐயன்ஓர்
இரவிலே ஆங்கு நிதமும்
இருந்துவாழ் வேளார்கள் தம்மில்ஒரு முதியர்பால்
[18]எற்குநல் [19]தளியை இங்கே
[20]விச்சைகொண்(டு) ஆக்குவை என்றே கனவினில்
விளம்பவும் மகிழ்ச்சி பொங்கி
மிகுபத்தி கொண்டஅவர் வேண்டற்(கு) இயைந்துநலம்
மேவுதன வணிகர் அன்பால்
[21]இச்சகம் போற்றும் படிக்(கு) அமைத் திட்டசீர்
[22]ஏய்ந்தபொன் ஆல யத்தில்
இருபுறமும் மனைவிமார் உடன்இருந்(து) அடியருக்(கு)
இன்அருள் சுரந்து நாளும்
பச்சைப் பசேல்எனும் பயிர்வளர் இலங்குடிப்
பதியில் இனி(து) ஆக வாழும்
பாலைஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 3

---

11 தரு-மரம் 12 விரை-வாசனை 13 கல்ல-தோண்ட 14 தொனி-ஒலி 15 தொல்உலகு-பழமையான உலகு 16 பண்ணவர்-தேவர் 17 இச்சை-விருப்பம் 18 எற்கு - எனக்கு 19 தளி - கோயில் 20 விச்சை - அறிவு 21 இச்சகம் - இவ்வுலகம் 22 ஏய்ந்த - பொருந்திய

[23]அம்பலம் தன்னில்நடம் ஆடிஅருள் முக்கண்எம்
[24]அத்தன் அர ஞர்க்கும் வெண்ணெய்
அள்ளிநிதம் உண்டதிரு மாற்கும் ஒரு சேய்என்ன
ஆகி இவ் உலகு சாத்தான்
[25]வம்புஅமர்ந்(து) உற்றசெண்(டு) ஆயுத புறத்தவன்
[26]வாரணத் [27]துவசன் ஐயன்
வன்மைபெற் றிடுசாத வாகனன் உடன்காரி
மாதுபுட் கலைம ணாளன்
[27]உம்பர்போற் றிடஅறம் காத்தவன் வெள்ஆனை
ஊர்திஅரி அரகு மாரன்
ஓதுபூ ரணைகேள்வன் ஐயனர் கடல்வண்ணன்
உறு யோகி யார் [28]இயப் பேர்
[29]பம்புஒலியி னில்பலர் பகர்ந்திடும் இலங்குடிப்
பதியில்இனி தாக வாழும்
பாலை அடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 4

ஐங்கரன் [30]மஞ்ஞையூர் அணிகுகன் பயிரவன்
அடல்மிகுந்(து) உற்ற அனுமன்
ஆர்ந்தசீர் ஓங்கும் பெருங்கருப் பண்ணன்எழில்
ஆனசின் னக்க ருப்பன்
பொங்குஅருள் புரிந்திடும் நொண்டிக் கருப்பனொடு
போற்றுபதி னெட்டாம் படிஇ
புகழ்வீர பத்திரன் பேச்சிராக் காயிநல்
புனிதசன் னசி மேடை
தங்கிவாழ்ந்(து) உரைகருப் பன்காளி வலிமிகச்
சார்சங்கி லிக்க ருப்பன்
தனிவீரன் முன்னேடி என்னும்இவர் துணையுடன்
[31]தரணிவாழ் மாந்தர் தங்கள்
பங்கு இருந்(து) அஞ்சல்என ஆண்டிடும் இலங்குடிப்
பதியில் இனி(து) ஆக வாழும்
பாலைஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 5

---

23 அம்பலம் - அரங்கு 24 அத்தன் - தலைவன் 25 வம்பு - மணம் 26 வாரணம் - யானை 27 துவசன் - கொடியுடையவன் 27 உம்பர் தேவர் 28 இயம் - வாத்தியம் 29 பம்பு - நிறைந்த 30 மஞ்ஞை - மயில் 31 தரணி - உலகம்

பொன்ஒளி ததும்புநின் கோயில்தனி லேதின
[32]புகல அரிய தேவர் ஒருபால்
பூதகணர் விஞ்சையர் முனிவர்யோ கியருடன்
புகழ்த்தவத் தோர்கள் ஒருபால்
[33]மன்னுகலை வல்லவர்கள் உல(கு)ஆளும் வேந்தர்எம்
மகுடதன வணிகர் ஒருபால்
மற்றும்உள மாந்தர்ஒரு பால்நின்று தம்குறை
வழுத்தஅன் போடு கேட்டு
நன்னயத் துடன்அவர்கள் வேண்டுவரம் ஈந்திடும்
நாயகா [34]தமியன் இந்த
நானிலம் தனில்உறும் வேதனை ளாம்தீர
நாதநீ [35]களைகண் ஐயா
[36]பன்னஅரிய நீலநிற வண்ணமொ டுஇலங்குடிப்
பதியில்இனி(து) ஆக வாழும்
பாலைஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 6

பூஉலகில் உனைஅன்பர் துயர்அறுத்(து) ஆட்கொளப்
போந்தவடி(வு) என்(று)உ ரைப்பார்
புகழும் [37]அயன் மாந்தர்தம் தலையில் பொறித்தபொறி
பொய்க்கினும் பாலை தன்னில்
மேவிஉன் னுல்சொலும் [38]கவுளிபொய்க் காமலே
மென்மையாய் ஓங்கும் என்ன
மேன்மையில் கேட்டுஇருந் தும்உனது தாள்மலர்
விரும்பாத தமிய னேற்குத்
தாவு[39]பரி மேல்பவனி கொண்டு இலகும் உனையலால்
தரணியில் கதியும் உண்டோ
தற்பரா என்தமிழ்ப் பாட்டிற்(கு) இரங்கிநீ
தயைபுரிந்(து) ஆள்வை ஐயா!
பாவலர் சொல் மாலைஆர்ந்(து) ஓங்கிடும் இலங்குடிப்
பதியில்இனி(து) ஆக வாழும்
பாலைஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 7

---

32 புகல - கூற 33 மன்னு - நிலைபெற்ற 34 தமியன் - தனியன்
35 களைகண் - பற்றுக்கோடு 36 பன்ன - கூற 37 அயன் - பிரமன்
38 கவுளி - பல்லி சொல் 39 பரி - குதிரை

ஓங்குநவ ரத்நமணி கொண்(டு)இலகு சென்னியும்
ஒளிதரும் குழைகொள் செவியும்
ஒண்கமல வதனமும் நெற்றியில் நீறுடன்
உற்றிடும் திலகமும் எனைத்
தாங்கிஅருள் செய்கின்ற கண்இணையும் அம்கோவை
தன்னைநிகர் இதழும் மேலாம்
[40]தரளம் அதை வென்றவெண் [41]மூரலும் வலிமிகச்
சார்ந்ததிரு மார்பும் அதனில்
தேங்குநல் [42]கண்டிகையும் முந்நூலும் அங்கையில்
சேர்ந்தசங்(கு) [43]ஆழி உடனே
திகழும்மோ திரமும்உயர் கிண்கிணி சதங்கைஒலி
செங்கமலம் அன்ன பதமும்
பாங்குடன் நினைக்கவளம் ஈந்துபொன் இலங்குடிப்
பதியில் இனி(து) ஆக வாழும்
பாலஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 8

எண்ணஅரிய வினைஎலாம் போக்கியும் கோள்தரு
பீரும்துயரம் ஒருக ணத்தும்
இல்லாமல் ஆக்கியும் பூதபை சாசங்கள்
ஏகவே காத்தும் உன்றன்
விண்உறுங் கோயிலின் சந்நிதியில் எக்காலும்
மேவும்மெய் அன்பர் கட்கு
மேன்மைமிகு கல்விதிரு புத்ரசம் பத்துபுவி
மேல் அர(சு) இயற்று யோகம்
[44]நண்ணஉட னேசெயும் கண்கண்ட தெய்வமாய்
நவில்வர்என் குறைகள் தீர
நாயகஎன் மீதுதயை செய்யாத(து) என்சொலாய்
நான்உன்தன் அடிமை நீஎன்
[45]பண்ணவன்நல் வாழ்வுதர வேண்டினன் இலங்குடிப்
பதியில் இனி(து) ஆக வாழும்
பாலஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 9

---

40 தரளம் - முத்து 41 மூரல் - பல்வரிசை 42 கண்டிகை - உருத்திராக்க மாலை 43 ஆழி-சங்கு 44 நண்ண - கிடைக்க 45 பண்ணவன்-தேவன்.

[46]ககனவெண் திங்களினை வென்றஒள் ஒளிதரும்
[47]கவிகைதினம் மேல்நி ழற்றக்
[48]கண்டுமொழி மாதர்[49]எண் மங்கலம் எடுக்கக்
கனிந்தபேர் அன்பு கொண்டு
சகம்அதில் மாந்தரைக் காத்துவந்(து) ஆளும்ஓர்
தன்மையாம் கட்டி யத்தைச்
சந்ததம் புகழுவோர் சாற்றுவய மாலையைத்
தரித்(து) உலகை ஆளும் எந்தாய்
புகலஅரிய நின்பெருமை சொல்லஎன் நாஒன்று
போதுமோ தமியன் அன்பால்
புகன்றிடும் சொல்மகிழ்ந் தேநல்கு வாய்உலகு
போற்றுபதி னாறு பேறும்
பகரும்உயர் [50]சேங்கைத் தடம்திகழ் இலங்குடிப்
பதியில்இனி(து) ஆக வாழும்
பாலஅடி யான்என்னும் எங்கள்குல தேவாம்
பகற்சால மூர்த்தி அருளே. 10

---

46 ககனம் - வானம் 47 கவிகை - குடை 48 கண்டு - கற்கண்டு 49 எண்மங்கலம் - எண்வகை மங்கலப் பொருள் 50 சேங்கைத்தடம் - சேங்கைக்குளம்

## வாழ்த்து

பன்னுவளம் இலங்கும்இலங் குடியில் வாழும்
பகற்சால மூர்த்திஅருள் பரவி வாழ்க!
துன்னுகலை வல்லவர்கள் அரசர் கீர்த்தி
துலங்கிடும்எம் தனவணிகத் தூயோர் வாழ்க!
கன்னலினும் இனியதமிழ் சைவம் நீறு
கண்டிகைநல் அடியர்குழாம் கற்று வாழ்க!
மன்னும்உல கினில்என்றும் வான்பொய் யாது
மழை பொழிக மகிதலமும் வாழ்க! வாழ்க!

நலம் வளர்க.

உ
சிவமயம்

# இலங்குடி
# அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனர் மீது
## ஆசிரிய விருத்தம்

தேவகோட்டை வன்றெண்டச் செட்டியாரவர்கள்
மாணுக்கருள் ஒருவராகிய நாச்சியாபுரம்
இராமநாதச் செட்டியாரால் (கூத்தலூர் இராமையா) இயற்றப் பெற்றது

பதிப்பாசிரியர்
நூலாசிரியரின் மகன் வயிற்றுப் பெயரன், கண்டரமாணிக்கம்

**கவிஞர் நா. மீனவன்**
இரா. செ. மே. பள்ளி
**புதுவயல்**

## பதிப்புரை

**பேரன்புடையீர்!**

உலகெலாம் காக்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் அருளால் மோகினி வடிவங்-கொண்ட திருமாலிடத்துத் தோற்றச் செய்த அருள்மித ஐயனர் தமிழகத்தில் பல்வேறு பெயர்களுடன் பல இடங்களில் வீற்றிருந்து அருளாட்சி செய்து வருகின்ருர். அத்தகு புண்ணியப் பகுதிகளில் ஒன்று இலங்குடி. காரைக்குடி-திருப்பத்தூர்ச் சாலையில் காரைக்குடிக்கும் நாச்சியாபுரத்திற்கும் இடையில் அமைந்த அழகிய ஊர் இது. இங்கு கோயில் கொண்டுள்ள ஐயனர் அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனர். செட்டிநாட்டுப் பகுதியில் உள்ள இத்தெய்-வத்தைக் குலமுதலாகக் கொண்டு வழிபடும் புள்ளிகள் சுமார் 2700. இத்தகைய பெருமான் மீது பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடப்பெற்ற நூல் இது. இதனை ஆக்கியவர் பெருந்தமிழ்ப் புலவராகிய தேவகோட்டை வன்றெண்டச் செட்டியார் அவர்களின் மாணுக்கருள் ஒருவராகிய, கூத்தலூர் இராமையா என்றழைக்கப் பெறும் நாச்சியாபுரம், இராம. வே. இராமநாதச் செட்டியார் ஆவார்கள். பண்டிதமணி கதிரேசனர், காரைக்குடிச் சொக்கலிங்க ஐயா போன்ற பெரும்புலவர்களின் நண்பர் பினங்குத் தண்ணீர்மலை வடிவேலன் பெயரில் பலவித யாப்பில் நூல் பாடியுள்ளார்கள். மேற்குடி ஐயனர் மீதும் வல்லநாட்டுக் கருப்பர் மீதும் ஆசிரிய விருத்தம், சந்தவிருத்தம் போன்றவை பாடியுள்ளார்கள். இன்னும் ஏராளமாக இவர்கள் பாடிய நூற்கள் கிடைத்தில. அவை இருப்பின் அன்பர்கள் தந்துதவின் வெளியிடலாம். இந்நூலை முதலில் வெளியிட்டவர் கம்பனூர் அம்பலம், நாச்சியாபுரம் பெ. சு. இராமசாமிச் செட்டியார் அவர்கள். இப்பொழுது அருள்மிகு பகச்சால மூர்த்தி ஆலயக் குடமுழுக்கு விழாவின் ஞாபகார்த்தமாக வெளியிடப்படுகிறது. இந்நூலைப் பயில்வோர் எல்லா நலனும் செல்வமும் பெற்று இன்புற அருள் மிகு பகச்சால மூர்த்தி ஐயனர் அருள் வாராக.

உ
சிவமயம்

# இலங்குடி அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனர் மேல் ஆசிரிய விருத்தம்

### விநாயகர்துதி

எண்திசைப் பாலர் போற்றும்
இலங்குடிப் பதியில் இந்த
மண்டலம் மதிக்கும் வண்ணம்
வளர்பகச் சால மூர்த்திக் (கு)
[1]அண்டரும் துதிக்கச் சொல்லும்
அருந்தமிழ்க் (கு) [2]அசலம் தந்த
[3]ஒண்தொடி பயந்த ஐங்கை
[4]ஒருத்தலைக் கருத்துள் வைப்பாம்.

### நூல்

திருமலியும் [5]அம்புயப் போதுஒத்த வதனமும்
செம்பவளம் ஒத்த வாயும்
தேன்ஒழுகு நறியமலர் மாலையும் [6]முநூலும்
செறிந்ததிரு மார்பின் அழகும்
[7]குருமலியும் வெண்[8]தாள நிரைபுரையும் மூரலும்
குழையணிந்(து) இலகு செவியும்
கொண்டாடும் அன்பர்கள் அகம்களி துளும்பக்
கொழிக்கும்இரு கருணை விழியும்
[9]உருமலியும் [10]வெம்பவக் கயவர்கட்(கு) இனியாத
[11]ஒண்பதத் துணையும் அடியேன்
ஓயாது கண்டுகண்(டு) உள்ளம் களித்துமனம்
உருகஎன்(று) அருள்பு ரிகுவாய்
[12]மருமலியும் நறுமலர்ச் சோலைபுடை சூழும்நல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே. 1

---

1 அண்டர்-தேவர்கள், 2 அசலம்-மலை 3 ஒண்தொடி-ஒளிபொருந்திய தோள்வளையணிந்தவள் (இங்கு உமையவள்) 4 ஒருத்தல் - ஆண்யானை 5 அம்புயப்போது - தாமரை 6 முநூலும் - முந்நூல், பூணூல் 7 குரு-நிறம் 8 தரளம்-முத்து 9 உரு-வடிவம் 10 வெம்பவம்-வெம்மையான பிறவி 11 ஒண்பதம் - ஒளிபொருந்திய திருவடி 12 மரு - மணம்

[13]காசுஅணி மணிப்பொன் முடிசூடி முழுமதியை
நிகர்[14]கவிகை ஒருபால்[15]நி ழற்றக்
[16]கட்டியம் கூறமட மின்னூர்கள் [17]அட்டமங்
கலம்எடுத்(து) அருகு சூழ
மாசுஅகலும் முத்தமிழ்க் கவிவாணர் பாடநால்
மறையோர்கள் ஆசி பேச
[18]மகிதலத்(து) அரசுபுரி மன்னர்ஆ யினும்நினது
மலரடிக(கு) அன்புஇ லாரேல்
போசனம் இழந்துகைப் பொருள்இழந்(து) அகலாத
[19]போதமும் இழந்து காக்கும்
பூமியும் இழந்துபிணி கொண்டு காற்றாடியைப்
போல்அலைந் திடுதல் [20]சரதம்
[21]வாசவன் முதல்தேவர் யாவரும் மதிக்கும்நல்
வளந்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே 2

[22]கந்துகம் நிகர்த்தகுவி [23]நகிலம்இரு[24]சேலைக்கடிந்(து)
[25]இகலும்வாள்-கண் மடவார்
காமவெறி கொண்டுகைப் பொருள்இழந்(து) ஓயாத
கவலைக் கடற்குள் மூழ்கிச்
சிந்தனைக லங்கிஅழல் மெழுகுஆக உருகிவெம்
தீநகரில் வீழ்ந்திடா(து) உன்
சேவடித் தொண்டுசெயும் அன்பனுக்(கு) அன்பனாய்ச்
செய்(து)அருள் பதித்தல் வேண்டும்
[26]மந்தர புயாசைலம் மீ(து)இலகு [27]தரளவட
மாலை[28]வரை அருவி மான
[29]மஞ்சுஒத்த கொண்டையில் [30]வனைந்தபொன் சுட்டிஅதில்
[31]மருவும்மின் எனவி திர்ப்ப
வந்தனை செயுந்தொண்டர் தம்உளம்குடி புகுந்துநல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே. 3

---

13. காசு-பொன் 14. கவிகை-குடை 15. நிழற்ற- நிழல்செய்ய 16. கட்டியம் - புகழ்ச்சொல் 17. அட்டமங்கலம் – எட்டுவிதமங்கலப் பொருள்கள் 18 மகிதலம்-உலகம் 19 போதம்-அறிவு 20 சரதம்-உறுதி 21 வாசவன்-இந்திரன்

22 கந்துகம்-பந்து 23 நகிலம்-மார்பகம் 24 சேலை-மீனை 25 இகலும்-போட்டி போடும் 26 மந்தர புயாசைலம்-மேரு மலைபோன்ற தோள்கள் 27 தரளம்-முத்து 28 வரை-மலை 29 மஞ்சு-மேகம் 30 வனைந்த-கட்டிய 31 மருவும்-பொருந்தும்

[32]குஞ்சரம் உரித்து [33]வடவரையைக் [34]குனித்(து) அடல்
கோள்[35] அரவு நாண்வி சித்துக்
குளிர்மதி முடித்துவெம் பருதிபல் [36]உகுத்(து) அவை
கொண்டதோர் சிவந்த னக்கும்
[37]கஞ்சனை [38]முனிந்து[39]கவி அரசையும் வதைத்(து) இலங்
காபுரிக்(கு) இறைவன் ஆன
கள்வனுக்(கு) இயமன்ஊர் காணிஎன ஈந்திடும்
கார்வண்ண னுக்கும் ஆங்கே
[40]மஞ்சன்என வந்துஎங்கள் குடிமுழுதும் ஆட்கொண்ட
வள்ளலே [41]மதுர கீத
மடமாதர் இருவர்இரு பால்உறத் தரிசனம்
வழங்கி[42]எற்கு அருள்பு ரிந்து
வஞ்சனைசெய் வம்பரொடு கூடாமல் ஆட்கொள்நல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே. 4

நேசமொடு காலையில் எழுந்துநீர் ஆடிவெண்
நீறுஇட்டு வினைஅ றுக்கும்
[43]நின்மல எழுத்துஐந்தும் [44]உன்னித் துதித்(து)இந்
நிலத்தில் பணிந்(து) எழுந்து
பூசனைசெய் திருவிழியில் ஆனந்த அருவிமழை
போல்பொழிய உள்ளம் உருகி,
பொன்அடி வணங்கிநின் ஆலயம் சூழ்ந்துஉனைப்
போற்றுத வம்பர் இயமன்
பாசவலை யில்பட்(டு)[45] உ ழன்(று)அ கம்வருந்திப்
பதைத்திடுவர் என்று பலரும்
பகருவ(து) உணர்ந்துநின் தன்இடத்(து) அன்புஇலாப்
பாதகர்க்(கு) உய்வும் உளதோ
வாசமலர் ஓடைஇள[46]வாளைகுதி பாயும்நல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே. 5

---

32 குஞ்சரம் - யானை 33 வடவரை - மேருமலை 34 குனித்து - வளைத்து
35 அரவு நாண் விசித்து - வாசுகியாகிய பாம்பை நாண் ஆகக் கட்டி
36 உகுத்து-உதிர்த்து 37 கஞ்சன்-கம்சன் (கண்ணபெருமானுக்கு மாமன்)
38 முனிந்து - சினந்து 39 கவிஅரசு - வாலி 40 மஞ்சன் – மைந்தன்
41 மதுர கீதம் - இனிய இசை 42 எற்கு - எனக்கு

43 நின்மலம்-குற்றமில்லாத 44 உன்னி-நினைத்து 45 உழன்று-வருந்தி
46 வாளை - ஒருவகைமீன்

ஓங்குகதிர் [47]இரவிஉத யம்கண்ட பனியும்மதி
ஒளிவரக் கண்ட இருளும்
[48]உரும்ஒலி செவிப்பட்ட [49]நெட்(டு)அரவும் வலியபச்
சோர்ந்தியைக் கண்ட மயிலும்
[50]விங்(கு) உடல் திறல் [51]அரிக் குருளைகண் பட்ட[52]மத
வேழமும் போல என்தன்
வினைகவலை நோய்பவம் பாதகம் துன்பம்பல்
வேதனைகள் நீங்க அருள்வாய்
[53]தூங்(கு)இசை [54]வரிச்சிறைத் தும்பி[55]முரல் [56]பைந்துழாய்த்
தொங்கல் [57]கருங்கொண்டல்நின்
தொண்டருக்(கு) இன்னருள் அளித்துப் [58]புரந்திடும்
தூண்டாத மணிவி ளக்கே!
மாங்குயில்[59]மறைச்சிறுர் ஓதுமறை பயிலும்நல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே. 6

பூஉலகில் மெய்ஞான தெய்வம்என நின்துணைப்
[60]பொன்பதம் [61]பரவும் [62]உரவோர்
புத்திரர்கள் கல்விநிறை செல்வமொடு சுற்றம்
பொருந்திவாழ்(வு) உறுதல் கண்டும்
தீவினையி னேன்ஒரு கணப்போதும் உனதுபுகழ்
செவிமடுத் திடவும் நினையேன்
சிந்தைமகிழ் வோடுதுதி பேசிடேன் இனிஎத்
திறம்கொண்(டு) எனக்(கு)அ ருள்வாய்
தேவர்துதி பூரண தேவியொடு புட்கலா
தேவிக்கும் உரிய கணவா
[63]திண்கொண்ட [64]வெள்ளைவா ரணம்ஏறு சேவகா
செம்பொன்மணி மாட வரையின்
[65]மாவகிர் நெடுங்கண்[66]அர மங்கையர்கள் ஆடும்நல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே 7

---

47 இரவி - சூரியன் 48 உரும் - இடி 49 நெட்டரவு - நெடிய பாம்பு 50 விங்குடல் - பருத்தஉடல் 51 அரிக்குருளை - சிங்கக்குட்டி 52 மதவேழம்-மதயானை 53 தூங்கிசை-மிகுந்தஇசை 54 வரிச் சிறைத் தும்பி- கோடுகள் அமைந்த சிறகுகளை உடைய வண்டு 55 முரல் - ஒலிக்கின்ற 56 பைந்துழாய் - பசிய துளசி மாலை 57 கருங்கொண்டல் - கரிய மேகம் (இங்கு திருமால்) 53 புரந்திடும்-காத்திடும் 59 மறைச்சிறுர்-அந்தணச் சிறுவர்கள்

60 பொன்பதம் – பொன் போன்ற பாதம் 61 பரவும் - வணங்கும் 62 உரவோர் - முனிவர் 63 திண்கொண்ட - வலிமைகொண்ட 64 வெள்ளைவாரணம் - வெள்ளையானை 65 மாவகிர் - மாவடுவைப் பிளந்தாற்போல 66 அரமங்கையர் - தேவமகளிர்

பொங்(கு)[67]அழல் பொறிசிதறும் வெம்கண்வாள் [68]அவுணர்புரி
[69]புன்தொழிற்(கு) அச்சம்உற்றுப்
[70]பொன்உலகின் [71]மகபதிதன் மனைவியொடும் அவர்கண்
புலப்படா வகை[72]க ரந்(து)இவ்
[73]அம்கண்மா ஞாலம்மிசை வந்(து)அவளை நின்பால்
அடைக்கலம் வைத்து நீங்க
[74]அசமுகி அவட்கொண்டு செல்ல[75]மா காளனால்
[76]அயிராணி யைப்பு ரந்த
எங்கள்குல தெய்வமே! ஏகனே! [77]போகம்அருள்
எந்தையே! இன்ப ரசமே!
ஏழ்உல கினும்புகழ் பரப்பிஎழு தீபமே!
இணையடி துதிக்க அருள்வாய்
[78]மங்கல இயங்கள்[79]எழு முகில்என முழங்கும்நல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே. (8)

[80]வெண்திரை புரட்டும்[81]முந்நீர் [82]சுவறி மாமேரு
[83]வெற்(பு) இடிந்(து) [84]அண்ட கோளம்
வெடிபட்டு[85] விதி[86]கற்பம் மாறிஒளிர் கதிரவன்
மேல்திசை உதித்து வாய்மை
கொண்டமறை நூல்பொய்த்(து) இவ்அகிலமேல் கீழதாய்க்
குப்புற்று விடினும் நினது
[87]குரைகழல் தூணைமலர்கள் கைவிடேன் என்னைஆள்
கொண்(டு)அருள் பதித்தல் வேண்டும்
[88]கண்டுஅமர் மொழிக்கவுரி பங்காளனும் [89]திகிரிகைக்
கொண்ட[90]கரிய முகிலும்
களிப்பொடும் அளித்தகரு ணாகரா அன்பர்
கருத்தில் புகுந்து குடிகொள்

---

67 அழல்பொறி - நெருப்புத்துண்டுகள் 68 அவுணர் - அசுரர் 69 புன் தொழில் – கேவலமான தொழில் 70 பொன் உலகு - இந்திரன் உலகு 71 மகபதி-இந்திரன் 72 கரந்து-மறைந்து 73 அம்கண் மாஞாலம் -இடமகன்ற உலகம் 74 அசமுகி-ஆட்டுமுகம் படைத்தவள் (சூரபத்மன் தங்கை) 75 மாகாளன் - பெரிய கருப்பன் 76 அயிராணி - இந்திராணி 77 போகம் இன்பம் (பேரின்பம்) 78 . மங்கல இயங்கள் - மங்கல வாத்தியங்கள் 79 எழுமுகில் - எழுந்துவரும் மேகங்கள்

80 வெண்திரை புரட்டும் – வெண்மையான அலைகளைப் புரட்டுகின்ற 81 முந்நீர்-கடல் 82 சுவறி-வற்றி 83 வெற்பு-மலை 84 அண்ட கோளம்- உலக உருண்டை 85 விதி-ஊழ் 86 கற்பம் மாறி - உலகம் முடியுங் காலம் 87 குரைகழல்-ஒலிக்கின்ற கழல் 88 கண்டு-கற்கண்டு 89 திகிரி-சக்கரம் 90 கரியமுகில்-கரியமேகம் (திருமால்)

வண்டுஅமர் பசுந்துளப மாலைஅணி மார்ப! நல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே. 9

[91]கண்மணியும் வெவ்வினை அகற்றுவெண் நீறும்எக்
காலத்தும் உலகில் வாழ,
கருதஅரிய சைவமறை [92]ஆகம புராணங்கள்
[93]காசினியில் என்றும் வாழ,
[94]பண்மலி [95]தமிழ்ப்பனுவ லால்உனைப் போற்றும்மெய்ப்
பாவாணர் பூவில் வாழ,
பகல்இரவும் உள்ளத்தில் உன்னைத் துதித்திடும்
பத்தர்அகி லத்தில் வாழ
விண்மணி எனத்தினம் விளங்குபரம ஆனந்த
வெள்ளமே! [96]திக்கு ளாரும்
விண்ணவரும் வந்திக்க வாழ்வுதரும் வள்ளலே!
[97]வீயாத கருணை புரிவாய்
மண்மகள்நு தல்திலகம் எனஒளிரும் மிக்கநல்
வளம்திகழ் இலங்கு டிக்கண்
மறைவழுக் காமெய்யர் மகிழ்வுஉறப் பார்உய்ய
வளர்பகச்சா லையனே. 10

---

91 கண்மணி - உருத்திராக்கம் 92 ஆகமம் - வேதம் 93 காசினி - உலகம்
94 பண்மலி - இசை நிறைந்த 95 தமிழ்ப் பனுவல் – தமிழ் நூல்கள்
96 திக்குளார் - திசைகளில் உள்ளோர் (எண்திசைப் பாலர்)
97 வீயாத - அழியாத



## இலங்குடியில் உள்ள அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனர் பேரில்

# திருப்பதிகம்

இயற்றியவர்:- புதுக்கோட்டை மாவட்டம் விரையாச்சிலையைச் சார்ந்த அம்பலம் அடைக்கலவன் செட்டியார் புதல்வர் சுப்பிரமணியன் செட்டியார்

### விநாயகர் காப்பு - வெண்பா

தேவர்கள் போற்றும் திருவாழ் இலங்குடியில்
பாவலர்கள் ஏத்தும் பகற்சாலர்-மேவ
மணமாப் பதிகம் வழுத்துதற்கு வெள்ளைக்
கணபதியின் சேவடியே காப்பு.

### சுப்பிரமணியர் வணக்கம் - அறுசீர் ஆசிரியவிருத்தம்

திருக்கயிலைப் பதிவாழும் திருநீல கண்டருக்குச்
செப்பு ஞானக்
குருக்களாய் வந்(து)அமர்ந்த கோமானே தினைப்புனத்தில்
குறத்தி தன்னைப்
பெருக்கமுடன் மணம்புரிந்து திருக்கழுகா சலத்(து)அமர்ந்தாய்
பெருமை யாக
உருக்கமுடன் உனைத்துதித்து நான்பாட வரம்மிகவும்
உதவு வாயே.

### வெண்பா.

இகத்தார்கள் போற்றும் இலங்குடியில் வாழும்
பகற்சால மூர்த்தியின்மேல் பாடத்-தகத்தகென
மின்னுதிரு வேல்எடுத்த வெற்றிமயில் வேலவன்தன்
பன்னுதிருத் தாளைப் பணி.
வேலணிந்த கையா விமலா மயூரகிரிக்
கோலமயில் ஏறும் குமரா-காலனைமுன்
அச்சமுறத் தான்உதைத்த ஆதிசிவன் புத்திரனே
இச்சையுட னேபுரப்பாய் இங்கு.
அண்டர் முனிவர் அனுதம்மும் போற்றுசிறுத்
தொண்டர் மகனைஅறுத்(து) உண்டசிவன்—கண்டசுதன்
வண்(டு)உலவும் பூங்குழலாள் வள்ளிமண வாளன்அடி
கண்டுபணிந் தேநீ களி.

### மகாலட்சுமி வணக்கம்

ஈசன் சகோதரியாய் ஏத்துதிரு மாலின்தன்
ஆசைமிகும் தேவி ஆனஒரு—வாசக்
கலவை அணிந்(து) இலகும் கஞ்சமலர்ச் செல்வி
குலவுபயத் தாள்கை குவி.

### சரசுவதி வணக்கம்

செந்தேன் சொரிந்(து) இலகும் செந்தா மரைப்பீடத்
தந்தை அணையும்மென் தாய்ஆகும்—விந்தைமிகும்
பாவாணர் ஏத்திப் பணிகின்ற வாணிஎன்
நாஆர்ந்தாள் பெற்றேன் நலம்.

# திருப்பதிகம்

சீருற்ற [1]சென்னிமிசை மின்னும்மணி மகுடமும்
சேர்ந்தவெண் நீற்றின் அழகும்
சிந்தூரத் திலகமொடு செங்கதிர்க் குழைகளும்
செம்பவள உரு[2]அ தரமும்
கார்உற்ற இருளைத் [3]துரக்கும்மதி முகமொடும்
கருணைமழை பொழிவி ழிகளும்
[4]கனககே யூரமும் கல்அனைய [5]வாகுவும்
[6]கண்டிகை தரித்த மார்பும்
தார்உற்ற கரம்அதில் சங்கு[7]ஆழி களும்இடை
தன்னில் ப்ரகாச கலையும்
சந்தமிகு கிண்கிணி சதங்கைகள் ஒலிக்கவும்
சவாதுமெய் யில்க மழவும்
பார்உற்ற பூரணை புட்கலை உடன்வந்து
பட்சம்வைத்(து) எனைஆ ளுவாய்
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே க

[8]அண்டபகிர் அண்டங்க ளோடுபுவ னங்களும்
[9]அட்டதிசை களும்ந டுங்க
அசையாது நின்றுபடி மிசையே தவம்புரியும்
அசுரனும் பத்மா வினைக்
கண்டுகளி கொண்டுசிவன் அன்னவன் கேட்டபடி
கரந்தொடவும் நீறு கவும்
களத்தவரம் ஈந்திடவும் அவர்தலையி லேதொடக்
கருதின(து) அறிந்து சூதாய்
மண்டுகா னில்படரும் மைவிரலி[10]நற்காவில்
மலைமகள் கொழுநன் அமர
மலர்மகள் கொழுநன்மோ கினிஎனச் சூரன்முன்
வந்(து)உற்று நீ(று)ஆக் கியே
பண்டுமறை பரமனொடு மருவிமென் கரம்அதில்
பாலித்(து)எ டுத்த புதல்வா!
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே உ

---

1 சென்னி-தலை 2 அதரம் - இதழ் 3 துரக்கும்-ஓட்டும் 4 கனககேயூரம்-பொன்னால் ஆன தோள்அணி 5 வாகு - தோள் 6 கண்டிகை - மாலை 7 ஆழி - சக்கரம் 8 அண்டம் - உலகம் 9 அட்டதிசை - எண்திசை 10 நற்காவில் - சோலையில்

[11]சற்குணம் நிறைந்தகரு ணாநிதிக் கடவுளாய்
சகம் மகிழ்ந்திடுசித் தனுய்த்
[12]தையல்இரு பால்உறஅவ் விண்ணவர்கள் பணி(வு)உறத்
[13]தானவர்கள் அஞ்ச லிப்ப
[14]விற்பன [15]விவேகம்உள பக்தரொடு வேந்தரும்
வெண்கவரி வீசி நிற்க
வேதியர்கள் மறைஓத அரம்பையர்கள் நடம்ஆட
விஞ்சையர் கனிந்து பாடக்
கற்றவர்கள் பாமாலை நித்தமும் சூட்டிடக்
காசினியில் மாந்தர் ஏத்தக்
கனகமணி சிம்மா சனத்திருந்(து) அரசுபுரி
கர்த்தனே என்னை ஆள்வாய்
பற்பல நிறம்பெறும் இரத்னமணி மார்பனே!
பரமகரு ணானந் தனே!
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே ௬

[16]அந்தரம் அளாவுநல் [17]சிகரியொடு மதில்கள்சூழ்
அழகான நின்கோ விலில்
ஐங்கரக் கடவுள்பதி னெட்டாம் படித்துறை
அமையுபூம் பாலை அடியும்
சந்நரவத னம்பெறு கறுப்பண்ண சாமியொடு
தாவு சின்னக் றுப்பன்
சாம்பிராணி வாசம்அணி நொண்டிக் கறுப்பனொடு
சாமிமே டைக்க றுப்பன்
புந்திமகிழ்(வு)ஆன(து)ஒர் பேய்ச்சிராக் காயியொடு
புகழ்பெற்ற உளிவீ ரனும்
புனிதசந் நாசியொடு பொன்னு விடைச்சியும்
பூமேடைஅமர் காளியும்
பந்திசே வல்காரன் முன்னோடி சூழநான்
பாடுகவி கேட்கும் அழகா!
பணிபவர்க் (கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே ௭

---

11 சற்குணம் - நல்லகுணம் 12 தையல் - பெண் 13 தானவர்கள் - வித்தியாதரர் 14 விற்பன - விந்தையான 15 விவேகம் - அறிவு அந்தரம் - வானம் 17 சிகரி - உச்சி

[18]வாரிதியின் நீர்[19]சுவறி மகமேரு நிலைதவறி
[20]வரைகளில் மலர்பூக் கினும்
மதி[21]இரவி நிலைதப்பி நெறிமாறி ஏகினும்
மறையின்மொழி பொய்ஆ கினும்
தாரணியில் உன்னைவந்(து) அஞ்சலிசெய் வோர்க்குநீ
தருவரம் தவறிடாது
தந்தவரம் அனுகூலம் ஆகிவிடும் என்பதில்
சந்தேகம் இல்லைமனதில்
காருநீ எங்கள்குலம் மேன்மேலும் விர்த்தியாக்
கனவாழ்வு புத்திரர்களும்
[22]கனகமும் தந்துநீ உன(து)அடிமை ஆக்கியே
காத்து[23]ரட்சித்(து) அருளுவாய்
பாரீஇலகு குதிரைநிறை சேங்கையொடு சோலையும்
பாங்(கு)உற அமர்ந்த யோகா!
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே ரு

நித்தியம் நின்னுடைய சன்னிதியில் வந்துமே
நின்(று)ஆடு பேயை எல்லாம்
நில்லுநில் என்றுமே நொண்டிக் கறுப்பணன்
நிமிடத்தில் முன்னம் ஏகிச்
சத்தியம் செய்துநீ போஎன்(று) அதட்டியே
சவுக்கால் அடிக்க மிகவும்
சப்தம்இட் டோடிடும் பேய்களை விரட்டியே
தன்பதியில் வந்து நின்று
புத்தியொடு பத்தியாய் வந்துபணி வோர்க்குநல்
[24]புத்திரசம் பத்தை அருளிப்
புகழ்பெருகு காணிக்கை தவறாது வாங்கிநின்
பொற்பதம் போற்றி செய்து
பத்தியாய் அமரும்நின் சேவகன் பெருமைஇது
பகர்நினது பெருமை கடலே
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே. சு

---

18 வாரிதி - கடல் 19 சுவறி - வற்றி 20 வரை - மலை 21 இரவி - சூரியன் 22 கனகம் - பொன் 23 ரட்சித்து - பாதுகாத்து 24 புத்திர சம்பத்து - புத்திரச் செல்வம்.

[25]கங்கணப் [26]பணிபூண்ட விலைமாதர் மோகமாம்
கனவலையில் சிக்கா மலும்
கனமான பொருள்வைத்(து) அரைக்காசும் ஈயாத
கல்நெஞ்ச லோப ரோடும்
[27]வங்கம்அது கொள்ளாத வஞ்சம்அது பேசிடும்
மதிகெட்ட பேய ரோடும்
மறுமாதர் மேல்ஆசை வைக்கின்ற பேரோடும்
மாபாத கத்த ரோடும்
[28]துங்கம்இல் மோசங்கள் செய்கின்ற பேரோடும்
துஷ்டகுணம் உள்ளவ ரொடும்
தொலையாத விரோதியொடும் சேராமல் உன்பதம்
துதிக்கஇன்(று) அருள்தரு குவாய்
[29]பங்கயக் கண்ணன்முக் கண்ணனும் அருள்செய்த
பாலனே! செய வீரனே!
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே எ

தெரியாமல் [30]அவனியில் சிறியன்நான் செய்திட்ட
தீவினைக ளொடு துன்பமும்
திடம்உள்ள பூதப் பிசாசுசூனியம் ஏவல்
தீராத நோய்கள் யாவும்
[31]கரியூர்தி என்றுநின் பெயர்புகல வும்வந்து
கண்முன் நில்லா(து) ஓட்டியே
காட்சியது தந்(து)எனது கவலையது நீக்கியே
கருணைவைத்(து) ஆளுதற்குத்
தருணம்ஈ(து) ஐயனே! மெய்யனே! துய்யனே!
சமயமிது சமையமையா
தற்பரா! மெய்ப்பொருள் தருஞான மூர்த்தியே!
சச்சிதா னந்தமுகிலே!
பரிவாக உன்னையே நம்பினேன் என்னையும்
[32]பட்சம்வைத்(து) ஆளும் அழகா!
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே அ

---

25 கங்கணம் - கைவளை 26 பணி - ஆபரணம் 27 வங்கம் - மரக்கலம்
28 துங்கம் - பெருமை 29 பங்கயம் – தாமரை 30 அவனி - உலகம்
31 கரியூர்தி - யானைவாகனம் 32 பட்சம் - அன்பு

அண்டத்தை ஓர்அடி அளந்ததிரு மாயனின்
அருமைமிகு மைந்தன் ஆகி
அவனியைச் சிருட்டிசெய் பிரமனின் சிரமொன்றை
அஞ்சா(து) அகற்றி உமையைக்
கண்டுமொழி செப்பிநல் கயிலைஅம் பதிவளரு
கர்த்தனும் பரமனுக்குக்
கண்மணி எனச்செப்ப வந்(து)அவ தரித்தவா
காமர்மிகு மா(து)இரு வரை
மண்தலம் மதிக்கவிண் உலகில் மலர்சூட்டியே
மகிழ்விஞெடும் மைந்து வெள்ளை
[33]மதகரியின் மேல்ஏறித் திடுதிடுஎன நகர்பவனி
வந்(து)அமர்ந் திட்ட முதலே!
பண்டைநாள் தொட்டுநான் இன்றுவரை செய்திட்ட
பாவங்கள் நீக்கி ஆள்வாய்
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே கூ

உற்ருர்கள் பெற்ருர்கள் உனையன்றி வேறுஒருவர்
உலகுதனில் இல்லை என்றும்
உபயபொன் பாதமலர் நேராய் வணங்கியும்
உன்நாமமே உரைத்தும்
நற்றாய் இலாதசிறு சேய்போல விட்டுவிடல்
ஞாயமோ நான்அறி கிலேன்
நந்தகோ பாலன்அரன் இருவரும் மகிழ்ந்(து)உறும்
நாதனே ஞான மணியே!
கற்றவர்கள் இதயமாம் [34]கமலம்அமர் தேவனே!
[35]கருணைப்பிர வாகநிதியே!
கனவிலும் நின(து)அருளை மறவாத எனைவந்து
காப்பதே பெருமை ஐயா!
பற்(று)ஆசை கொண்டுநின் அருளையே பாடினேன்
பாலனை எனக்(கு) அருளுவாய்
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
பகற்சால மாமூர்த்தியே ம

---

33 மதகரி - மதயானை 34 கமலம் – தாமரை 35 கருணைப்பிரவாகம் - கருணைவெள்ளம்

தேவர்துயர் நீக்கிய [36]சிகண்டிமலை முருகனைத்
 தினமும் மறவாத சீலர்
[37]செகமுழுதும் ஓர்குடையில் ஆண்டிடுஞ் சோழர்க்குத்
 திருமுடி தரிக்கும் மேலோர்
நாவலர்கள் மெச்சிடும் கொடையாளர் ஏழுகோவில்
 நகரம்என் தனவணிகரில்
நல்லமண மாம்இலுப் பைக்குடிக் கோவிலான்
 நலமிக்க மன்னர் தம்மில்
காவல்புரி தொண்டமான் தேசத்தில் [38]விரசைவளர்
 கௌரியின் பாத மலரைக்
களிப்புடன் பரவிவாழ் அடைக்கலவன் ஈன்றநல்
 காதலன் சுப்ர மண்யன்
பாவலன் சொல்லிடும் புன்மொழியை அன்பொடு
 பானைச் சூட்டி ஆள்வாய்
பணிபவர்க்(கு) அருள்புரி இலங்குடியி லேவளர்
 பகற்சால மாமூர்த்தியே ௰௧

வாழி ஐங்கரன் வண்கரி யோகியும்
வாழி பூரணை புட்கலை மாதரும்
வாழி சண்முகன் வள்ளிதெய் வானையும்
வாழி முத்தமிழ் வையகம் வாழியே!

சீர்உலாவும் இலங்குடி மாநகர்
 சேர்ந்(து) அமர்ந்த பகற்சால மூர்த்திதன்
[39]தார்உலாவும் [40]பனுவலைச் சந்ததம்
 தாங்கிநின்று படிப்பவர் கேட்பவர்
பார்உலாவும் பலநலச் செல்வமும்
 பண்பின்ஓங்குறு ஞானமும் கேள்வியும்
[41]ஏர்உலாவும் படிமிகப் பெற்றவர்
 [42]இம்பர்[43]உம்பரும் ஏத்துற வாழ்வரே.

---

36 சிகண்டி - மலை 37 செகம் - உலகம் 38 விரசை - விரையாச்சிலை 39 தார் - மாலை 40 பனுவல் - நூல் 41 ஏர் - அழகு 42 இம்பர் - இவ்வுலகில் உள்ளோர் 43 உம்பர் - தேவர்.

# ஐயன் ஆர்

ஐயனார் வழிபாடு தமிழகத்தில் தொன்றுதொட்டு நிலவிவருவது. தமிழகச் சமயங்களில் சமண, புத்த மதங்களிலும் ஐயனார் வழிபாடு இருந்திருக்கிறது. ஐ என்றால் தலைமை. ஐயன் என்றால் முதன் மையானவன், தலைவன் ஆர் விருதி மரியாதைப்பன்மையாகி ஐயனார் என்று வழங்கியது.

நகரத்தாருக்குரிய ஒன்பது கோயில்களும் கோத்திரப் பிரிவை உணர்த்தும் பெருந்தெய்வ வழி பாட்டுக்குரியன. ஐயனார் வழி பாடு குலதெய்வக் கோயிலாம் காவிரிப்பூம் பட்டினத்துக் காலத்தி லேயே புறம் பணையான் கோட் டம் என்றும், பாசண்டச் சாத்தன் என்றும் ஐயனார் வழிபாடு இருந் தமையைச் சிலப்பதிகாரத்தில் காணலாம். ஐயனார், சாஸ்தா, அரிகரபுத்திரன் என்னும் பெயர் களில் ஐயனார் இப்போது இந்துக் களால் வணங்கப்படுகின்றார். இந்து சமயத்தில் சாத்தன் ஐயனார் வழிபடு தெய்வமாக ஏற்றுக் கொள்ளப் பெற்ற பின்னர், ஐயனா ரைச் சிவபெருமான் மகனாகச் சொல்கின்ற வரலாறு பரவியது.

பார்த்தனுக்கருளும் வைத்தார்
பாம்பரையாடவைத்தார்
சாத்தனை மகனா வைத்தார்

என்பது அப்பர் தம் திருப் பயற்றூர்த் திருப்பதிகம்.

ஐயனார் வழிபாடு மக்களிடம் பெருக வளர்ந்த போது, ஐயனார் அவதாரம் பற்றிய செய்திகளும் புராணங்களில் இடம் பெற்றன. புராணக் கதைகள் மிகுதியும் இடம் பெற்றுப் புராண நாயகம் என்று கூறப் பெறுவது கந்தபுரா ணம். கந்தபுராணம் அசுரகாண் டத்தில் மகாசாத்தப்படலத்தில் ஐயனார் அவதாரம் விரிந்துரைக் கப் பெற்றுள்ளது. ஐயனார் வழிபாடு, ஐயப்பன் வழிபாடு வளர்ச்சியுற்றுத் திகழும் இக் காலத்து ஐயனார் அவதாரம் பற்றிய இவ்வரலாறே மக்கள் மனதில் பெரிதும் இடம் பெற் றுள்ளது.

சூரபதுமன் கொடுமைக் கஞ்சி இந்திரனும் இந்திராணியும் மறைந்து வாழ்கின்றனர். இந் திரன் சீர்காழிப்பதியில் நந்தவனம் அமைத்து மணம் மிகுந்த மலர் களால் சிவபெருமானைப் பூசித்து வழிபட்டு வந்தான். சூரபது மனால் துன்புற்ற தேவர்கள் சீர் காழி வந்து இந்திரனை வணங் கினர். இந்திரனும் தேவர்களும்

தங்கள் குறை தீரக் கைலை மலையில் சிவபெருமானிடம் சென்று முறையிடுவதெனத் தீர்மானிக்கின்றனர். இந்திரன் இந்திராணியிடம் கைலை செல்வதைக் கூறி விடை கொடுக்க வேண்டுகின்றான். ஒரு துணையும் இன்றித் தனியே இருக்கும் தன்னை அசுரர் அபகரிப்பார்களே என இந்திராணி அஞ்சுகின்றாள். இந்திரன், சகியே வருந்தாதே, அமரர்களுடன் நான் கைலை சென்றால் உனக்குத் துணையில்லை என்று கலங்க வேண்டாம்.

**செய்ய சடைமேற் சிறந்த மதிக்கோடுபுளை**
**துய்யவனும் வேலைத்துயின் றோனுஞ் சேர்த்தளித்த**
**ஐயன் எமக்கோர் அரணாகியே யிருக்க**
**நையல் முறையாமோ நங்காய் நவிலுதியால்**

என்று ஆறுதல் கூறி மேலும்,

ஏவென்ற கண் மடவாய் ஈசனருள் அன்னோனை வாவென்றளியால் வழுத்தி மனத்துன்னின் இங்கே மேவும்

எனவும் கூற, இந்திராணி ஐயனாருடைய வரலாறு யாதென வினவுகின்றாள். இந்திரன் உரைக்கின்றான்.

அமுதம் பெறுவதற்காகத் தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தனர். ஆல கால விடம் எழுந்தது. தேவர்கள் அஞ்சி நடுங்கினர். கயிலாயம் சென்று சிவபெருமானை வேண்டினர். சிவபெருமான் ஆல கால விடத்தை உண்டு தேவரைக் காத்தனர். பாற்கடலைத் தொடர்ந்து கடைய அமுதப் பொற்குடம் தோன்றியது. அமுதம் உண்ணத் தேவர்கட்கும் அசுரர்கட்டும் போர் மூண்டது. திருமால் சேணார் உலகில், புவிதன்னில் திசையில் எங்கும் காணாத மோகினி வடிவங் கொண்டு வந்தார். தேவர்களும் அசுரர்களும் மோகினியைக் கண்டு மையங்கொண்டனர். மோகினி இங்கு அமுதம் இருக்கின்றது, நான் இருக்கிறேன். இரண்டிலொன்றை எடுத்துக் கொள்ளுங்கள் என்று கூறத் தேவர்கள் அமுதத்தை விரும்பினர். அசுரர்கள் மோகினியை விரும்ப, உங்களில் வீரன் யார் என்று மோகினி வினவ, அசுரர்கள் தங்களுக்குள் சண்டையிட்டு அழிந்தனர். தேவர்களுக்கு அமுதம் அளித்த திருமால் மோகினி வடிவுடன் பாற் கடலின் கரையில் இருந்தார்.

சிவபெருமான் பெருவனப்புடைய வடிவம் தாங்கித் திருப் பாற் கடலருகே வந்தார். திருமாலாகிய மோகினி அவரைக் கண்டு மையலுற்றாள்.

சிவபெருமானுக்கு நான்கு வகையயான சக்திகள். உலகை உற்பத்தி செய்கின்ற போது உலக அன்னையாக சிவபெருமானுக்கு பார்வதி தேவியாகவும், அன்பு கொண்டு உலகைக் காக்கும் போது திருமாலாகவும், கோபங் கொண்டு உலகை அழிக்கும் போது காளியாகவும், நன்மையை நிலை நாட்டும் போது துர்க்கை யாகவும் சக்தி திகழ்கின்றாள். சக்தியாகிய திருமால் பால் சிவபெருமான் ஈர்க்கப் பெற்றார். அறியும் அரனும் அன்பில் லயித் தனர். அவ்வன்பின் வெளிப் பாடே அரிகரன்.

"மைக்கருங்கடல் மேனியும் வானுலாஞ்
செக்கர் வேணியும் செண்டுறு கையுமாய் உக்கிரத்துடன்"

தோன்றிய ஒரு மகனுக்கு அரிகர புத்திரன் என்று பெயரிட்டு, உருத் திரர் கூட்டத்துருவணாக வைத்து, ஒரு புவனம் அளித்து, அதற்கு இறைவனாக்கி; தேவரும் முனி வரும் வணங்கும் முதன்மை யளித்து, பல வரங்களைச் சிவ பெருமான் வழங்கினார். பூரனை, புட்கலை ஆகிய தேவியரோடு, வெள்ளையானை பெற்று ஐயனார் திகழ்கின்றார்.

புவனம் ஈந்து
புவனத்திறையென
அவகை நல்கி அமரரும்
மாதவர்
எவரும் எத்திடும் ஏற்றமும்
நல்கினான்

அரிகர புத்திரன் மண்ணகத்தரும், வானவரும், மலர் அண்ணலும் தினம் அர்ச்சிக்கும் நீர்மையனாகத் திகழ்ந்து, பெருஞ்சாரதர் தம் மோடு எங்குமாகி இருந்து எவ் வுலகையுங் காக்கின்றான். அப் படிப்பட்ட அரிகரன் உன்னை வந்தினிக் காத்தருள்வான் என்று இந்திரன் இந்திராணியிடம் கூறு கின்றான். துணை நீங்கத் தனித் திருக்கும் மகளிரைக் காக்கின்ற துணை அரிகரன். அவ் ஐயனார் தன்னை நினைத்து வேண்டுவார் முன் உடன் தோன்றுவான். இந்திரனும் இந்திராணியும் அவ னை நினைத்து வணங்குகின்றனர்.

காருறழ் வெய்ய
களிற்றிடையாகிப்
பாரிடர் எண்ணிலர் பாங்குற
நண்ணப்
பூரணை புட்கலை பூம்புறமேவ
வாரணம் ஊர்பவன் முன்னுற
வந்தான்.

வந்த ஐயனிடம் இந்திரன் இந்திராணியைத் தனியே துணை யின்றி இவ்வனத்தில் வைத்தால் அசுரர் கவர்வர், உன் அடைக் கலம் என்று வேண்டினான்.

அதனைக் கேட்ட அரிகரன், "நின் ஏந்திழை தன்னைத் தீதடையாது, சிறப்பொடு காப்பன்," நீ தனியே விட்டுச் செல்வதாக நினைக்க வேண்டாம் என்று கூறுகிறான். மேலும் தன் படைத்தலைவ னாகிய மாகாளனை (பெரிய கருப்பர்) அழைத்து, இந்திராணி தனியே இருக்கிறாள், தீங்கு வராமே காவல் கொள் நீயெனக் காப்புறுதி செய்கிறான். பின்னர் இந்திராணியை அயோ-முகி கவர வரும் போது இந்திராணி அரி கரன் புகழையெல்லாம் சொல்லி அழைக்கிறாள்.

"பையரா அமளியானும் பரம் பொருள் முதலும் நல்கும் ஐயன், விண்ணோர்க்காதி, செண்டார் கையன், எங்கள் கடவுள், தொல்சீர் வீரன், அடல் உருத்திரன், கடல் நிறத் தெந்தை, பூரணக் கிறைவன், புட்கலை கணவன், வாரணத் திறை மேற்கொண்டு வரும் பிரான்", என்பன அப்புகழ் சேர் மொழிகள். பின்னர் கதைப் போக்கில் மகா காளர் தோன்றி ஐயன் பணியென்று இந்திராணி யைக் காப்பாற்றுகிறார்.

கணவன் மனைவியை ஒரு வேலைகாரணமாகப் பிரிந்து செல் கின்ற போது, காக்கும் துணையாக வைத்து வணங்குகின்ற தெய்வமே ஐயனார். நகரத்ததார் திரை கட லோடித் திரவியம் தேடச் செல் கின்ற போது தம் குல தெய்வ ஐயனாரைக் குடும்பத்தைக் காக்க வேண்டி வணங்கிச் செல்வது மரபு. ஐயனார் வழிபாட்டில் நகரத்தார்களுக்கு, செட்டி நாட்டிற் கிடையே பிணைப்புத் திகழ்வதற் காகவே ஓரூரில் வாழ்வோர்க்குக் குல தெய்வமாகும் ஐயனார் மற் றோர் வட்டாரத்திற்குச் சென்று வழிபடுபவராக இருப்பதைக் காணலாம். ஐயனார் வழி பாட்டில் பல கோயில் பிரிவுகளைச் சேர்ந்த வர்களும் ஒரு ஐயனாரைக் குல தெய்வமாக வழிபடுவதைக் காண லாம்.

பகற்சால மூர்த்தி ஐயனாரை 24 ஊர்களைச் சேர்ந்த சுமார் 2400 புள்ளிகள் வணங்குகின்றார்கள். இளையாற்றக்குடி, பிள்ளையார் பட்டி, வைரவன் கோயில், மாத்தூர், இலுப்பக்குடி ஆகிய கோயிற் பிரிவுகளைச் சேர்ந்தவர் கள் வழிபடுகின்றார்கள். ஆதலால் பகற்சால மூர்த்தி ஐயனார் கோயி லில் கைலாசவிநாயகர், கற்பக விநாயகர், கன்னி மூல கணபதி, சித்தி விநாயகர் என விநாயகர் பலர் அருள் பாலிக்கின்றனர். ஐயனார் கோயில் உள்ளே சேமங் குதிரை சிறப்புடன் நிற்கின்றது. ஒரு புறம் நாட்டியக் குழுவினர் பொம்மைகள். நாம் பார்க்கும்

மற்றோர் புறத்தில் வில்லேந்திய இராமன், சீதை, இலக்குவரோடு காட்சியளிப்பது இங்குள்ள தனிச்சிறப்பு.

சிவபெருமானை வணங்கி வழி படுவார்க்கு அவ்வழிபாட்டின் பயனை நல்குபவர் சண்டீசர், அம்பிகை, விநாயகர், முருகன், சூரியன் ஆகிய மூர்த்திகளுக்கும் சண்டீச பதம் உண்டு.

ஐயனார் கோயிலில் சண்டீசர் அமைந்திருப்பது பகற்சால மூர்த்தி ஐயனார் கோயிலுக்குரிய சிறப்பு. பகற்சால மூர்த்தி ஐயனா ரைப் பணிந்து அருட்பயன் பெறு வோம்.

ஐயனாரு நெறஞ்ச வாழ்வு கொடுக் கணும் ஆயுசுக்கும் நெனச்ச தெல் லாம் நடக்கணும்.

**பேராசிரியர் நா.சுப்பிரமணியன்**
**இராமசாமி தமிழ்க் கல்லூரி**
**காரைக்குடி.**

# இறையுணர்தல்

நீ கடவுளை உணர வேண்டுமா?

அன்பாயிரு, உண்மை சொல்

அறிவாளியாயிரு, ஆண்மையோடிரு

சுறுசுறுப்பாயிரு ஆனால் படபடப்பாயிராதே

பொறுமையாயிரு ஆனால் சோம்பேறியாயிராதே

சிக்கனமாயிரு ஆனால் கருமியாயிராதே

அன்யாயிரு ஆனால் அடிமையாயிராதே

இரக்கம் காட்டு ஆனால் ஏமாந்து போகாதே

கொடையாளியாயிரு ஆனால் ஓட்டாண்டியாய் இராதே

வீரனாயிரு ஆனால் போக்கிரியாகி விடாதே

இல்லறத்தை நடத்து, ஆனால் காம வெறியனாயிராதே

பற்றற்றிரு ஆனால் வனம் போய்விடாதே

நல்லோரை ஆனால் அல்லோரை வெறுக்காதே

**ஸ்ரீ ஞானானந்தகிரி சுவாமிகள்**

## தானியங்கள் பத்து

| | |
|---|---|
| கோதானம் | பூதானம் |
| இரணியதானம் | கிருகதானம் |
| குளதானம் | ரசித்தானம் |
| இலவணதானம் | வஸ்திரதானம் |
| தானியதானம் | நிலதானம் |

## உபசாரங்கள் பதினாறு

| | |
|---|---|
| ஆவாகனம் | ஆசமனம் |
| பாத்தியம் | அருக்கியம் |
| ஆசமனீயம் | ஸ்நானம் |
| வஸ்திரம் | யக்ஞோபவீதம் |
| கந்தம் | புஷ்பம் |
| தூபம் | நைகுவத்தியம் |
| தாம்பூலம் | நமஸ்காரம் |
| உத்வாகனம் | தீபம் |

# சிவனின் ஏழு தாண்டவங்கள்

| | |
|---|---|
| திருநெல்வேலி | - முனிதாண்டவம் |
| திருப்புத்தூர் | - கௌரி தாண்டவம் |
| மதுரை | - சந்தியா தாண்டவம் |
| திருபாலங்காடு | - சங்கார தாண்டவம் |
| திருக்குற்றாலம் | - திரிபுர தாண்டவம் |
| சிதம்பரம் | - ஆனந்தத் தாண்டவம் |
| பேரூர் | - ஊர்த்துவத் தாண்டவம் |

## பதினெண் புராணங்கள்

மச்சியம் கூர்மம்,
வராகம் வாமனம்பிரமம்,
வைணவம் பாகவ தம்,
சைவம் இலிங்கம்,
பௌடிகம் நாரதீயம்,
காருடம் பிரம கைவர்த்தம்,
ஸ்காந்தம் மார்க்கண்டேயம்,
ஆக்கினேயம் பிரமாண்டம்,
பதுமம்

# முப்பத்திரண்டு அறங்கள்

சாலை அமைத்தல் ஓதுவார்க்கு உணவு அறுசமயத்தார்க்கு உணவு,
பகவுக்கு வாயுறை, சிறைச் சோறு, ஐயம்,
தின்பண்டம் நல்குதல், அறவைச் சோறு,, மகப்பெறுவித்தல்,
மகவு வளர்த்தல், பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடுதல்,
அறவைத் துரியல், துன்னம், நோய் மருந்து,
வண்ணான், நாவிதன், கண்ணாடி,
காதோலை, கண்மருந்து, தலைக்கு எண்ணெய்,
பெண்போகம், பிறர்துயர் காத்தல், தண்ணீர்ப் பந்தல்,
மடம் கட்டுதல், தடம் உண்டாக்குதல், சோலை அமைத்தல்,
ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏர்விடுத்தல்,
கன்னிகாதானம் விலை கொடுத்து உயிர்காத்தல்

# செய்ய வேண்டியவை

இறைவனை வணங்குக

உண்மையே பேசுக

நன்மையே செய்க

சிந்தித்துப் பேசுக

சமயம் அறிந்து பேசுக

சொல்வதையே செய்க

சினத்தை நீக்குக

செருக்கை அடக்குக

இனிமையாய்ப் பேசுக

அன்பாகப் பேசுக

மெதுவாய்ப் பேசுக

அவையறிந்து பேசுக

பேசாதிருந்தும் பழகுக

சோம்பலை அகற்றுக

எண்ணிச் செய்க

உயர்வையே எண்ணுக

## ரூ. 10,000 க்கு மேல் நன்கொடை வழங்கியோர்

1. ஆவி.ப.மு.முரு.பழ குடும்பத்தார் காரைக்குடி
2. சா.லெ.நா.சா. குடும்பத்தார் காரைக்குடி
3. ஆவி.ப.முரு.லெ. குடும்பத்தார் காரைக்குடி
4. சா.நா. குடும்பத்தார் காரைக்குடி
5. மெ.செ.மெ.மெ குடும்பத்தார் காரைக்குடி
6. கரு.கும. மயில் அண்ணாமலை குடும்பத்தார் காரைக்குடி
7. மெ.செ.மெ.மெ. செட்டியப்பன் குடும்பத்தார் காரைக்குடி
8. மெ.செ.ச. குடும்பத்தார் காரைக்குடி
9. மெ.செ.ராம.மெ.குடும்பத்தார் காரைக்குடி
10. சா.நா.அரு.நா. அருகுடும்பத்தார் காரைக்குடி
11. குப.சு.மெ. குடும்பத்தார் காரைக்குடி
12. மெ.வி. மெய்யப்பன் குடும்பத்தார் காரைக்குடி
13. சித.ராம. சிதம்பரம் செட்டியார் காரைக்குடி
14. அ.மு.க.மு. குடும்பத்தார் காரைக்குடி
15. இராம. நாராயணன் காரைக்குடி
16. ஸ்ரீல ஸ்ரீநாச்சியப்பசுவாமிகள் கோவிலூர்
17. தேனுண்டாள் படைப்புப்பங்காளிகள் மானகிரி
18. கா. கும. குடும்பத்தார் அமராவதிபுதூர்
19. SP. அழகப்ப செட்டியார் விராமதி
20. RM. சதாசிவம் செட்டியார் புதுப்பட்டி
21. இராஜமாணிக்கம் செட்டியார் & தியாகராஜன் வலையாபட்டி
22. வெ. சபாரத்தினம் குடும்பத்தார் ஓ. சிறுவயல்
23. சொ.வெ. அழ குடும்பத்தார் ஓ. சிறுவயல்
24. இலப்பக்குடி நகரத்தார் ஓ. சிறுவயல்
25. ஒக்கூர் நகரத்தார் ஓ. சிறுவயல்
26. ந.சி. சொ. சிவசுப்பிரமணியன் குடும்பத்தார் கண்டவராயன்பட்டி
27. AL.S. அழகப்பசெட்டியார் குடும்பத்தார் கண்டவராயன்பட்டி
28. AL.S. தியாகராஜன் செட்டியார் குடும்பத்தார் கண்டவராயன்பட்டி
29. N.N.S. செந்தில் நாதன் செட்டியார் குடும்பத்தார் கண்டவராயன்பட்டி
30. சு.முரு. நாச்சியப்ப செட்டியார் குடும்பத்தார் கோணாபட்டு
31. இலுப்பக்குடி நகரத்தார் கோணாபட்டு
32. கரு. பழ.சி. பழ குடும்பத்தார் தேவகோட்டை
33. அரு.அரு குடும்பத்தார் தேவகோட்டை
34. சோம. லெ. வெள்ளையன் அவர்கள் தேவகோட்டை
35. சு. அரு குடும்பத்தார்
36. சுப. சிங்காரம் அவர்கள் கோலாலம்பூர்
37. ந.பழ. சித.மு. வெ. ராம குடும்பத்தார் மிதிலைப்பட்டி
38. ந.பழ.ப.சு.சே.சுப்பிரமணியன் செட்டியார் மிதிலைப்பட்டி
39. அரு. சுப. சிங்காரம் செட்டியார் குடும்பத்தார் மிதிலைப்பட்டி
40. S.P.S.RM.SP ராமசாமி, காரைக்குடி

## நன்கொடை ரூ 5000 க்கு மேல் வழங்கிய அன்பர்கள்

1. நா.வ.மெ. ராம குடும்பத்தார் காரைக்குடி
2. ஆ.வி. மெ.பழ. குடும்பத்தார் காரைக்குடி
3. கும.சொ. கும. குடும்பத்தார் காரைக்குடி
4. ஆ.வி.ப. வகையார்கள் காரைக்குடி
5. சித. ராமசாமி காரைக்குடி
6. சிவ. நா. மெ. நா. மெய்யப்பன் குடும்பத்தார் காரைக்குடி
7. முத்து. ராம. மகாலிங்கம் குடும்பத்தார் காரைக்குடி
8. நா.பழ. நா. முத்தையா செட்டியார் காரைக்குடி
9. M.N.M.M. இராமநாதன் குடும்பத்தார் காரைக்குடி
10. சித.ராம. நா. குடும்பத்தார் காரைக்குடி
11. மெ.செ.அ. பழ.பழநியப்பன் காரைக்குடி
12. அ.மு.கமு.சித. தெய்வானை ஆச்சி காரைக்குடி
13. ராம. சுப்பய்யா (ஜெயமணி) காரைக்குடி
14. அரு.மெ. பெரி. தெய்வராயன் செட்டியார் காரைக்குடி
15. பி.ச.சுப. உமையாள் ஆச்சி காரைக்குடி
16. வ. திலகவதி காரைக்குடி
17. சா.நா. அ.அழ. பொதுக் குடும்பத்தார் காரைக்குடி
18. P. நாச்சியப்பன் காரைக்குடி
19. சு.நா. அழ. சுப்பிரமணியன் காரைக்குடி
20. சா.வெ. ராம. மீ. குடும்பத்தார் காரைக்குடி
21. ஜெயம் & Co அண்ணாமலை தேவக்கோட்டை
22. சு.சொ.லெ. ராமச்சந்திரன் கூத்தலூர்
23. சு.சொ. லெ.சுப கூத்தலூர்
24. அண. முரு கூத்தலூர்
25. RM. கணேசன் புதுப்பட்டி
26. நாக. ராம. ராமசாமி புதுப்பட்டி
27. ராம. கதிரேசன் புதுப்பட்டி
28. சித. வே. கண குடும்பத்தார் நாட்டரசன் கோட்டை
29. KR. SM. PL. இராதாகிருஷ்ணன் தேவகோட்டை
30. L. AR.RM. லெட்சுமணன் தேவகோட்டை
31. R. இராதாகிருஷ்ணன், தேவகோட்டை
32. AN. வெங்கடாஜலம் தேவகோட்டை
33. M. தியாகராஜன் தேவகோட்டை
34. முத்துகரு அருபழ. முத்தையா செட்டியார் தேவகோட்டை
35. MLM. குடும்பத்தார் தேவகோட்டை
36. பெ.அழ. வீர. ராம. வீரப்ப செட்டியார் தேவகோட்டை
37. AL.S. விஸ்வநாதன் செட்டியார் கண்டவராயன்பட்டி
38. சுப.சொ. சப்பிரமணியன் செட்டியார் நாச்சியார்புரம்
39. MR. அழகப்பன் ஓ. சிறுவயல்
40. மு.பழ.ராம. சாத்தப்செட்டியார் குடும்பத்தார் விராமதி
41. T. தேனப்ப செட்டியார் குளிபிறை